KALKI 6.10.91 ரூ. 3.00

# கல்கி

பொன்விழா ஆண்டு





டைரக்டர் ஸ்ரீதர்:

## திரையுலக அனுபவங்கள்

# ஸெரிலாக்

# நாள் முழுவதும் அருந்திட சமநிலைச் சத்துணவு

# மெனு

உங்கள் குழந்தைக்கு எப்போதும் செரிலாக் வீட் உணவின் நற்பலன்களை அளித்து வருகிறீர்கள். ஆனால் இப்போது உங்கள் குழந்தைக்கு 6 மாதங்களாகிவிட்டதால், குழந்தை உணவில் புதிய சுவைகளை அறிமுகப்படுத்த இதுவே ஏற்ற பருவம். ருசிமிகுந்த, ஊட்டச் சத்துக்கள் சமநிலையிலுள்ள செரிலாக் உணவு வகைகளான-செரிலாக் வீட்-ஆரஞ்சு, செரிலாக் வீட்-வெஜிடபிள், செரிலாக் வீட்-ஆப்பிள் —ஒவ்வொன்றும் உடல் வளர்ச்சிக்கு வேண்டிய முக்கிய ஊட்டச் சத்துக்களும், தாதுப் பொருட்களும், வைட்டமின்களும் சரியான சமநிலையில் கலந்த முழுமையான உணவு. உங்கள் குழந்தைக்கு பரவசமூட்டும் சுவைகளை வகைவகையாக அளிக்கும் ஏற்றதொரு மெனு. இரண்டு வயது வரையிலும், அதற்கு அப்பாலும் தொடர்ந்து தரக்கூடிய மெனு.

## உதயவேளை உற்சாகத்திற்கு

காலைச் சிற்றுண்டிக்கு, செரிலாக் வீட்-ஆரஞ்சின் பழச் சுவை நற்பலன்களை உங்கள் குழந்தைக்கு கொடுக்கலாம். பொறுக்கி எடுக்கப்பட்ட ஆரஞ்சுச் சுவைகளை, கோதுமை மற்றும் பாலுடன் கலந்து சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது. உங்கள் குழந்தையின் நாள் சுறுசுறுப்பாகத் தொடங்கிட உதவும் முழுமையான உணவு.




## மதிய உணவின் மனநிறைவு

மதிய உணவின்போது மற்ற எல்லோரையும் போல, உங்கள் குழந்தைக்கும் காய்கறிகள் தேவை. பசுமையான கேரட்டுகள் மற்றும் தக்காளியின் நற்பலன்கள் கோதுமை மற்றும் பாலுடன் கலந்த செரிலாக் வீட்-வெஜிடபிள். உங்கள் குழந்தைக்கு கிடைப்பதோ திருப்தியான மதிய உணவு.




## அந்திவேளை ஆனந்தம்

நாள்முழுக்க விளையாடிக் களைத்த குழந்தைக்கு அந்தி வந்ததும் அருமையான விருந்து தேவை. சற்றே வித்தியாசமான உணவு கிடைத்தால் குழந்தைக்கும் பரவசமாகும். இருக்கவே இருக்கிறது செரிலாக் வீட்-ஆப்பிள். ஆப்பிள் பழங்கள், பால் மற்றும் கோதுமையுடன் கலந்த அற்புதச் சுவை. உங்கள் குழந்தைக்கு வித்தியாசமான விருந்து.




பெட்டிகளின் மீதுள்ள குறிப்புகளைப் பின்பற்றுக செரிலாக்கின் தரமான தயாரிப்புகள்.



**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்-ஒவ்வொரு வேளை உணவிலும்**



''வசவுக்குரியவன் நானில்லை....

# "வசவுக்குரிய ஆள் நானில்லை!"

கல்கத்தாவில் கவர்னர், மந்திரிகள், சட்டசபைத் தலைவர், உயர்நீதிமன்ற நீதிபதிகள் முதலிய வி. ஐ. பி.க்களின் கார்களின் முன்னால் ஒரு சிவப்பு விளக்குப் பொருத்தப்பட்டிருக்கும். அந்தக் கார்களுக்குச் சாலைகளில் முன்னுரிமை அளிக்கப்படும்.

எதிர்க்கட்சித் தலைவர் என்ற முறையில் சித்தார்த்த ராய்க்கு ஒரு மந்திரியின் அந்தஸ்து உண்டு. அவருடைய காரிலும் ஒரு சிவப்பு விளக்குப் பொருத்தப்பட்டிருக்கிறது.

அவர் சமீபத்தில் எங்கோ போயிருந்த போது அங்கிருந்த மக்கள் அவருடைய காரிலிருந்த சிவப்பு விளக்கைப் பார்த்து, அவர் ஒரு மந்திரி என்று நினைத்துக் கொண்டு அவரது காரைச் சூழ்ந்து கொண்டார்களாம். எழுதவியலாத வசவு ஒன்றைப் பயன்படுத்தி அவரைத் திட்டினார்களாம்.

ராய் இந்த நிகழ்ச்சியை ஒரு பொதுக் கூட்டத்தில் குறிப்பிட்டு இவ்வாறு சொன்னார்: ''நான் அந்த ஜனங்களுக்கு விளக்கினேன், 'இந்த வசவுக்குரிய ஆள் நானில்லை. இந்த வசவுக்குரிய ஆள் வெளிநாட்டில் சுற்றிக் கொண்டிருக்கிறார்'....''

ராய் யாரைக் குறிப்பிட்டார் என்பது தெளிவு. மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு தான் வெளிநாட்டுப் பயணம் மேற்கொண்டிருக்கிறார்.

ராய் இப்படிப்பட்ட ஒரு வசவுச் சொல்லை ஒரு முதல் மந்திரிக்குப் பயன்படுத்தியது பற்றிக் காங்கிரஸ்காரர்களுக்கே அதிர்ச்சி ஏற்பட்டது. இந்த விஷயம் செய்திப் பத்திரிகைகளில் வெளிவராதிருக்க அவர்கள் செய்த முயற்சிகள் பலிக்கவில்லை. மறுநாள் பத்திரிகை படித்தவர்கள் பெரும் அதிர்ச்சியடைந்தார்கள்.

மேற்கு வங்க சட்டசபைக் கூட்டத்தில் ராயின் நடத்தை கடுமையாகக் கண்டிக்கப்பட்டது. இந்தக் கூட்டத்துக்கு ராய் வரவேயில்லை.

பின்னர் டில்லியில் இவ்வாறு சால்ஜாப்பு சொன்னார் சித்தார்த்த சங்கர் ராய் : ''நான் அந்த நிகழ்ச்சியை வேடிக்கையாகத்தான் குறிப்பிட்டேன். எனக்கு யாரையும் அவமானப்படுத்தும் நோக்கம் இல்லை. ஆனால் நான் அந்தச் சொல்லை உபயோகித்திருக்கக் கூடாது என்பதை இப்போது உணர்கிறேன். எல்லோருக்கும் ஹாஸ்ய உணர்வு ஒரேயளவில் இருக்காதல்லவா!''

குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை கதைதான்!

## பூஜா சீசன்

'பாரோ மாஸே தேரோ பார்வண்' என்றொரு வங்காளிப் பழமொழி. வங்காளத்தில் 12 மாதங்களில் 13 விழாக்கள் என்பது இதன் பொருள். இந்த விழாக்களில் முக்கியமானது துர்க்கா பூஜா. 'பூஜா' என்றாலே அது துர்க்கா பூஜையைத்தான் குறிக்கும். நவராத்திரி சமயத்தில் இது நடைபெறும். பூஜைக்கு இரண்டு மாதம் முன்பிருந்தே கல்கத்தாவுக்குக் களைகட்டி விடும். ஒரு மாதம் முன்பிருந்தே கடைகள் விடுமுறை நாட்களிலும் திறந்திருக்கும். பஸ், டிராம்களில், தெருக்களில் பூஜைக்குத் துணிமணி வாங்குபவர்களின் கூட்டம், நெரிசல். கடைகளில் 'சேல்' விளம்பரங்கள்...

ஆனால் இந்தத் தடவை வழக்கமான உற்சாகத்தைக் காணோம். ஜனங்களின் முகத்தில் சோர்வு, கவலை...

மன்மோகன் சிங்கின் பட்ஜெட்டின், வலிமையே வலிமை!

- எஸ். கே. எம்.



...வெளிநாட்டில் அவர் சுற்றுகிறார்!''

# திட்டமிட்டபடி கிருஷ்ணா நதிநீர் வருமா?

வீட்டு வசதித் துறை அமைச்சர் செல்வகணபதி ஒடிசலான உருவம்தான் என்றாலும், முகத்தில் உள்ள மீசை அவரது உருவத்துக்கு ஒரு கம்பீரத்தைக் கொடுக்கிறது. இன்றுள்ள தமிழக அமைச்சர்களில், டெல்லிக்குச் சென்றால் இந்தியிலேயே பேசக் கூடியவர் இவர் ஒருவராகத்தான் இருக்க முடியும். (முதல்வரைத் தவிர). காரணம், கிட்டத்தட்ட ஆறு வருடங்கள் படிப்பு நிமித்தமாக டெல்லியில் இருந்தவர் அமைச்சர்.

''என்னுடைய அரசியல் வாழ்க்கை தலைவரின் (எம். ஜி. ஆர்.) மரணத்துக்குப் பிறகுதான் ஆரம்பமானது. அவர் உருவாக்கிய கழகத்தைக் கட்டிக்காக்கும் தைரியமும், சாதுரியமும், புரட்சித் தலைவி ஒருவருக்குத்தான் உண்டு. அவர் கண்டிப்பானவர் என்றாலும் தொண்டர்களிடம் அன்பைப் பொழிபவர். அந்த அடிப்படையில்தான் புரட்சித் தலைவியின் தொண்டனாக என்னை மாற்றிக் கொண்டேன்'' என்கிறார் செல்வ கணபதி.

அமைச்சருக்குச் சொந்த ஊர் திருச்செங்கோடு. பள்ளி, பட்டப்படிப்பு, சட்டப் படிப்பு போன்றவற்றை உள்ளூர், மாவட்டத் தலைநகர், மாநிலத் தலைநகர், நாட்டின் தலைநகர் என்று பல இடங்களில் முடித்ததால் முழுமையான காஸ்மோ பாலிடனாக மாறி இருக்கிறார். அமைச்சர் டெல்லி ஜவாஹர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்த போது அங்கே படித்த பப்புவைக் காதலித்துக் கலப்பு மணம் செய்து கொண்டார். பப்பு வேலூரைச் சேர்ந்தவர்.

''பலர் அரசியல் வாழ்க்கையில் சிறைக்குச் சென்றதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். நானும் இரண்டு முறை சிறை சென்றிருக்கிறேன். என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், சிறை செல்வது என்பது அரசியல் நடவடிக்கைகளில் ஒரு பகுதிதான். அதில் பெரிதாகச் சொல்லிக் கொள்வதற்கு என்ன இருக்கிறது?'' என்கிறார் அமைச்சர்.

''சென்னையில் பாதாளச் சாக்கடை போன்ற வசதிகள் எப்போதோ ஒரு குறிப்பிட்ட மக்கள் தொகைக்காக உருவாக்கப் பட்டது. ஆனால் இன்று பல மாடிக் கட்டடங்கள் ஏராளமாக உருவாகி வருகின்றன. ஆனால் ஏற்கெனவே செய்யப் பட்ட வசதிகள் அப்படியேதான் இருக்கின்றன. இந்த நிலையில் பல மாடிக் கட்டடங்கள் கட்டப்படுவது தடை செய்யப் படுமா?''

''இன்று மக்களுடைய கனவே சொந்தமாக ஒரு வீடுதான். நிலத்தின் விலை நகர்ப்புறங்களில் உயர்ந்து கொண்டே போகிறது. இதன் காரணமாக, மக்கள் ஃப்ளாட்டுகளில் குடியேற ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த அடிப்படையில் பார்த்தோமேயானால் ஒரேயடியாக பல மாடிக் கட்டடங்களை நாம் தடை செய்ய முடியாது. அதே சமயம் அறுபது எழுபது ஆண்டுகளுக்கு முன்பு அப்போதைய மக்கள் தொகைக்குப் போடப் பட்ட குடிநீர், பாதாளச் சாக்கடை போன்ற அத்தியாவசியமான விஷயங்களை, இன்றைய மக்கள் தொகைக்கு ஏற்ப விரிவுபடுத்த வேண்டும். நகர்ப்புறங்களை அபிவிருத்தி செய்ய - குறிப்பாகச் சென்னை நகரத்துக்கு நிறையப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.''

டெல்லியில் சட்டப்படிப்பை முடித்ததும், திருச்செங்கோட்டில் பிராக்டீஸ் செய்தார் அமைச்சர். இலவசமாகச் சட்ட உதவி செய்வது, என்பதுதான் அமைச்சருக்குப் பிடிக்குமாம். ''1987 இல், திருச்செங்கோட்டில் உள்ள ஒரு மில்லில், யூனியன் தகராறு. கழகம் 'ஜெ - ஜா' என்று பிளவுபட்டிருந்த

நேரம். ஜெ. அணியைச் சேர்ந்த ஒருவர் படுகொலை செய்யப்பட்டார். அது சம்பந்த மான கிரிமினல் வழக்கை நான் நடத்தி னேன். அப்போது, எங்கள் தலைவியிடம், நடந்த விஷயத்தை விளக்குவதற்காக அவரைச் சந்திக்க வேண்டியிருந்தது. அந்தச் சமயத்தில்தான் முதன் முதலில் அவரைச் சந்தித்தேன்'' என்று நினைவு கூர்கிறார் அமைச்சர்.

''1992 - இல் சென்னைக்குக் கிருஷ்ணா நதித் தண்ணீர் வருமா? தமிழக அரசு தனது பங்குத் தொகையைத் தருவதில் ஏதோ பிரச்னை இருப்பது போலத் தெரிகிறதே?''

''பணத்துக்கு ஒன்றும் பிரச்னை இல்லை. வேலைகள் ஜரூராக நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ரெட்ஹில்ஸ், பூண்டி நீர்த் தேக்கங்களின் கரைகளை உயர்த்துவது, இணைப்புக் கால்வாய்களை அமைப்பது போன்ற வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. திட்டமிட்டபடி நடக் கும் என்பது என் நம்பிக்கை.''

ஜெயலலிதா தலைமையில் அமைச்ச ராக இருப்பதை நினைத்துப் பெருமைப் படுகிறார் அமைச்சர். ''பிரச்னைகளைச் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடிய தன்மை, சிக்கலான பிரச்னைகளுக்கும் தீர்வு காணும் துணிச்சல்... ஆகியவற்றைக் கொண் டுள்ள புரட்சித் தலைவியின் கீழ் பணிபுரிவ தால் செய்யும் பணியில் ஒரு திருப்தி இருக்கிறது'' என்கிறார் அமைச்சர்.

''வீட்டு வசதி வாரிய வீடுகளின் கட்டு மானத் தரத்தை உயர்த்துவது, அந்த வீடு களை நன்றாகப் பராமரிப்பது போன்ற விஷ யங்களுக்கு முன்னுரிமை தரப்படும்'' என் கிறார்.

''உங்களைத் தேர்ந்தெடுத்த தொகுதி மக்களுக்கு என்ன செய்வதாக இருக்கி றீர்கள்?''

''அந்தத் தொழிற்சாலையைக் கொண்டு வருவேன்; இந்த ஆற்றின் குறுக்கே அணை யைக் கட்டுவேன் என்றெல்லாம் நான் வாக்குறுதிகள் ஏதும் கொடுக்கவில்லை. என்றாலும், சில அடிப்படைப் பிரச்னை களைத் தீர்த்தாலே மக்கள் சந்தோஷப்படு வார்கள். முதல் பிரச்னை: குடிநீர்த் தட்டுப் பாடு... இதை ஒழித்தே ஆக வேண்டும். இரண்டாவதாக, எங்கள் ஊரில் விசைத் தறிகள் அதிகம். ஆனால் அடிக்கடி மின் தடங்கல், வோல்டேஜ் பிரச்னை போன் றவை ஏற்படுகின்றன. இதைச் சரி செய்ய வேண்டும்; தற்போதைக்கு அவ்வளவு தான்!'' என்று முடிக்கிறார் அமைச்சர்.



சந்திப்பு : ப்ரியன்

படம் : ராதாகிருஷ்ணன்

சிறுமி ஜெயலட்சுமி...



சிறுமி ஜெயலட்சுமி ஒரு செவிட்டூமை. அவளிடம் பேச வேண்டுமானால் நாம் சைகையால்தான் பேச வேண்டும். அவளும் சைகையால்தான் பதில் சொல்லுவாள். ஆனால் இன்றைக்கு நிலைமையே மாறிவிட்டது! நாம் ரொம்பவும் சிரமப்பட்டு அவளுக்குப் புரியும்படியான சைகை பாஷையில் பேச வேண்டியதில்லை. நாம் கேட்க வேண்டியதை நோட்டில் எழுதிக் காட்டினால், அவளும் தனது பதிலை எழுதிக் காட்டுகிறாள்!

இரண்டே மாதத்தில் இந்த மாற்றம் நிகழ்ந்திருக்கிறது என்றால் பலரும் நம்பத் தயங்குகிற விஷயம்தான். என்றாலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நடத்திய 'எழுத்தறிவு இயக்கத்தி'ல் இந்த அற்புதம் நிகழ்ந்திருப்பது உண்மை. இந்தச் சிறுமி மட்டுமல்ல; சிதம்பரம், காட்டுமன்னார் கோவில் தாலுகாக்களிலுள்ள 459 கிராமங்களில் வசிக்கும் அத்தனை பேரும் இந்த எழுத்தறிவு இயக்கத்தின் மூலம் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். இப்படியொரு இயக்கம் எப்படித் தோன்றியது?

டில்லியில் நடந்த அனைத்துப் பல்கலைக் கழகங்களின் மாநாட்டில் கலந்து கொண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் டி. சி. மோகன், தமது பல்கலைக் கழக மாணவர்களைக் கொண்டு, சுற்றுவட்டாரக் கிராமங்களில் உள்ள அனைவரையும் கல்வியறிவு பெற்றவர்களாகச் செய்ய முடியுமென்று அறிவித்தார். அதன்படி திரும்பி வந்ததும் அதற்கான திட்டங்களைப் பல்கலைக் கழக ஆசிரியர்களைக் கொண்டு ஆராய்ந்தார். மாவட்ட ஆட்சியரிடம் கலந்தாலோசித்து, கிராம அதிகாரிகள், ஊராட்சி மற்றும் பஞ்சாயத்துத் தலைவர்கள் மூலம், தமது மாணவ, மாணவியர் கிராமங்களுக்கு வந்து அனைவருக்கும் எழுதப் படிக்கக் கற்றுத் தரப் போவதை அறிவிக்கச் செய்தார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆசிரியர்களும் மாணவ, மாணவியருமாகச் சுமார் இரண்டாயிரம் பேர் கிராமப்புறங்களில் சென்று கல்வி கற்பிப்ப தென்றால் சும்மாவா? நாற்பத்தைந்து இடங்களில் அவர்களுக்கான தங்குமிடங்கள் அமைக்கப்பட்டன. தாற்காலிகமாகக் கிராமப்புறங்களில் 1,200 கல்விக் கூடங்கள் அமைக்கப்பட்டன. மாணவ, மாணவியரின் சாப்பாட்டு வசதிக்காகப் பல்கலைக் கழக ஹாஸ்டல்களின் சமையல் குழுக்களும் கூடவே புறப்பட்டன.

இத்திட்டத்திற்காகத் தேசிய அளவில் தயாரிக்கப்பட்ட 'புதிய பாதை - 1, 2, 3,' என்ற தலைப்புக்களில் அச்சடிக்கப்பட்ட (அந்தந்த மாநில மொழிகளில்தான்) புத்தகங்களோடு மாணவ, மாணவியரும் ஆசிரியர்களும் புறப்பட்டார்கள்.

தேசியப் பல்கலைக் கழக மானியக்

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் :

# இரண்டாயிரம் மாணவர்களின் இணையற்ற சேவை!


துணைவேந்தர்

குழுவும் மக்கள் தொடர் கல்வி அமைப்பும் இத்திட்டத்திற்கு வழங்கிய நிதியுதவியுடன் பல்கலைக் கழகமே தங்குமிடங்களை ஏற்படுத்தியிருந்தாலும், பல ஊர்களில் உள்ளூர்ப் பிரமுகர்களே ஆர்வத்தோடு முன் வந்து, அவரவர் இல்லத்தில் முடிந்தவரை மாணவ, மாணவியரையும் ஆசிரியர்களையும் தங்க வைத்து உபசரித்தனர்.

மாணவ, மாணவியரிடம் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்ட அந்த மக்களும் விருந்தோம்பலில் சளைத்துப் போகவில்லை. தங்களால் முடிந்தவரை அவர்களைத் தங்கள் இல்லங்களுக்கு அழைத்துச் சென்று உணவு கொடுத்து உபசரித்தனர்.

அப்புறமென்ன! இவர்களுக்குக் கற்றுத் தரும் ஆர்வமும் அவர்களுக்குக் கற்றுக் கொள்ளும் ஆர்வமும் நூற்றுக்கு நூறு சமமாக இருக்கிற போது, பலனைப் பற்றிக் கேட்பானேன்! அறுபதே நாட்களில் 459 கிராமங்களைச் சேர்ந்த அனைவரும் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு விட்டார்கள்.

திட்டத்திற்கான எல்லா ஏற்பாடுகளையும்தான் செய்து விட்டோமே என்று துணைவேந்தரும் சும்மா இருந்து விடவில்லை. அவரும் தினந்தோறும் முகாம்களுக்குச் சென்று மாணவ, மாணவியரையும், கிராம மக்களையும் உற்சாகப்படுத்தினார். ஆக, எல்லாத் தரப்பிலும் இருந்த உற்சாகம்தான் இந்த வெற்றிக்குக் காரணம் என்றால் அது மிகையல்ல.

இந்த இயக்கம் நடந்து கொண்டிருந்த போது, எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பது என்கிற ஒரேயொரு நோக்கத்தை மட்டுமே மாணவ, மாணவியர் கொள்ளவில்லை. பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மருத்துவ மாணவ, மாணவியரும் ஆசிரியர்களும் மருத்துவ முகாம்களையும் கூடவே நடத்தினர்.

இந்தத் திட்டத்தில் பங்கு பெற்றுப் பயனடைந்த 36,000 கிராம மக்கள் ஒவ்வொருவருக்கும் பல்கலைக் கழகம் ஒரு பச்சைநிற அடையாள அட்டையை வழங்கியிருக்கிறது. அந்த அட்டையைப் பல்கலைக் கழக மருத்துவமனையில் காட்டினால் இலவச வைத்திய உதவி கிடைக்கும் என்பதும், அந்த அட்டை வைத்துள்ள குடும்பத்திலுள்ள ஆணோ பெண்ணோ படிக்க விரும்பினால், அவர்களுக்குத் தொலைதூரக் கல்வித் திட்டத்தில் முன்னுரிமை வழங்கப்படும் என்பதும் அந்தக் கிராம மக்களுக்குக் கிடைத்துள்ள மற்றொரு லாபம்!

கடந்த கோடைக்காலத்தில் நடத்தப் பெற்ற இந்த எழுத்தறிவு இயக்கம் அந்தக் கோடையுடனேயே முடிந்து போய் விட்டதா? இந்தக் கேள்விக்குத் துணைவேந்தர் அளிக்கும் பதில், கோடைக்கு அடுத்து வரும் மழைக்காலம் போல் மகிழ்ச்சியூட்டுகிறது.

"நடந்து முடிந்தது ஒரு முன்மாதிரித் திட்டம்தான். இது ஆண்டுதோறும் இன்னும் சிறப்பாகச் செயல்படும். கூடவே இன்னும் பல புதிய திட்டங்களும் அறிமுகப் படுத்தப்படுகின்றன. கிராம மக்களுக்கு வெறுமனே எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தால் மட்டும் போதாது. பயிர்ப் பாதுகாப்பு, குடும்பநலத் திட்டம், சுய வேலை வாய்ப்பு ஆகியவற்றையும் பல்கலைக் கழக மருத்துவ, விவசாயக் கல்லூரி மாணவ, மாணவியரைக் கொண்டு செயல்படுத்தப் போகிறோம்'' என்கிறார் துணைவேந்தர்.

'தம்பியுடையான் படைக்கு அஞ்சான்' என்பது போல் மகத்தான சக்தி கொண்ட நமது மாணவ, மாணவியரை நல்ல வழிகளில் நமது அரசு பயன்படுத்த ஆரம்பித்தால் நாம் இன்னும் எவ்வளவோ சாதிக்கலாம் என்பதற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் மிகச் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. ஆனால் இதையெல்லாம் அரசியல்வாதிகள் புரிந்து கொள்வதற்கு நாம் யாரைக் கொண்டு எந்த இயக்கத்தை நடத்துவது என்பதுதான் நமது கவலையெல்லாம்.

செய்தித் தொகுப்பு : கோபால்

கல்கியில் வெளியான "கைகொடுத்த கடன் தொகை"
போட்டியில் பங்கு பெற்ற உண்மை சம்பவம்

# குலுக்கலுக்கும் எனக்கும் அப்படியென்ன தொடர்பு!




ராணிப்பேட்டையில் பணியாற்றி வந்தாலும் நான் சென்னையைச் சேர்ந்தவன் தான். ஆகவே, சென்னையில் ஒரு வீடோ அல்லது ஃப்ளாட்டோ வாங்கிவிட வேண்டும் என்பது கனவு. பணம் வேண்டுமே? அதனைச் சேமிக்க வேண்டி ஸ்ரீராமில் 30,000 ரூபாய் சீட்டில் சேர்ந்தேன்.

ஜுலை 89 – ல், அதாவது ஐந்தாவது குலுக்கலில் என்னுடைய எண் விழுந்தது. ஏகப்பட்ட மகிழ்ச்சி. கையில் இருந்தால் அந்தத் தொகை செலவழிந்து விடும். ஆகவே ஃபிக்சட் டெபாசிட்டில் போட்டுவைத்தேன். வட்டித் தொகை சீட்டுக் கட்டப் பயன் பட்டது. இது வளர்த்துவிட்ட தன்னம்பிக்கையில் 89 அக்டோபரில் மீண்டும் ஒரு 30,000 ரூபாய் சீட்டில் சேர்ந்தேன்.

இதனிடையில் வீட்டு வசதி வாரியத்தின் ட்வின் டைப் வீடு ஒன்றுக்கு விண்ணப்பித்தேன். 90 ஜனவரியில் தபால்காரர் ஒரு நல்ல செய்தியைக் கொண்டு வந்தார். வீட்டுவசதி வாரியக் குலுக்கலில் எனக்கு ஒரு வீடு விழுந்திருந்து ...

ஒரு வகையில் பெருமிதம். மற்றொரு வகையில் கவலை. ஏற்கெனவே ஸ்ரீராமிலிருந்து பெற்ற தொகை மற்றும் பிராவிடெண்ட் ஃபண்டிலிருந்து நான் பெறக் கூடிய தொகை – இரண்டும் சேர்ந்தாலும் வாரியத்துக்குச் செலுத்த வேண்டிய தொகையைச் சமாளிக்க முடியாது. என்ன செய்ய?

அந்தக் கவலை அதிகநேரம் நீடிக்கவில்லை. வாரியத்திலிருந்து கடிதம் வந்த அன்றே ஸ்ரீராம் பிரதிநிதி போனில் தெரிவித்த செய்தி எல்லாக் கவலைகளையும் போக்கிவிட்டது. இரண்டாவது சீட்டிலும் குலுக்கலில் நான்தான் அதிர்ஷ்டசாலி!

அதன்பின் வீடு வாங்குவதில் எனக்கு அதிக சிரமம் இருக்கவில்லை.. அதென்னவோ, குலுக்கலுக்கும் எனக்கும் அப்படியொரு தொடர்பு!

ஆர். பார்த்தசாரதி
ராணிப்பேட்டை 632 406

## வடக்கு வாசல் :



■ வைகாபிஷேகமும் வர்த்தக் கடத்தல்!

**வ**ளையாத இடையைச் சிரமப்பட்டு வளைத்துச்சர்ப்ப நடனம் ஆடி, காதலனைக் கொன்றவர்களைப் பழிவாங்கும் 'நாகின்' கதைகள் ஹிந்தியில் டஜன் கணக்காய்ப் படமெடுக்கப்பட்டு விட்டன. இப்போது நாகினின் சாபத்தைப் பீர்க்கங்காயில் பார்க்கிறார்கள் வடவர்கள். காரணம், ஆச்சரியமானது!

மலைப்பீர்க்கையை ஏற்றிக் கொண்டு பஞ்சாப் வழியே இரவில் ஒரு லாரி வந்து கொண்டிருந்ததாம். தார்ச்சாலையே மஞ்சமாய் - ஆணும் பெண்ணுமாய் இரு நாகங்கள் கூடியிருந்ததை டிரைவர் கவனிக்கவில்லை. ஆண் நாகம் மட்டும் சக்கரத்தின் அடியில் துவையலாகிவிடப் பெண் நாகம் சீறி



■ ரூ. 300 கோடி சொத்து!



■ வி. ஏ. ஜி. குற்றச்சாட்டு!

# பீர்க்கங்காய் பெற்ற சாபம்!

யெழுந்து பார்ப்பதற்குள் வெகுதூரம் போய் விட்டது லாரி.

கோபித்த நாகப்பெண் சும்மா விடுவாளா? 'மலைப் பீர்க்கங்காயைச்சாப்பிடும் எல்லோரும் சாகக் கடவது' என்று சபித்து விட்டாளாம்.

ஆகஸ்டு மாதத்திலேயே இந்த அப்பாவிக் காயின் விற்பனை படுத்துவிட்டது. இந்தப் 'பீர்க்கங்காய் எதிர்ப்பு'ப் போராட்டத்தை முன்னின்று நடத்துபவர்கள் பள்ளிக் குழந்தைகள்தான். பெற்றோரை வாங்கவே விடுவதில்லை. பள்ளிகளில் கூடிக் கூடிப் பேசுகின்றனர். 'பீர்க்கை இலையில் பாம்பின் பிம்பம் தெரிகிறது' என்றும் சொல்கின்றன இந்தக் குழந்தைகள்.

பீர்க்கைப் பயிரிட்டவர்கள், 'சாபம் எப்போது நீங்கும்' என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

### வைர வியாபாரிகள் கடத்தல்:

**தி**ல்லியின் ஒபராய் ஹோட்டலிலிருந்து வைர வியாபாரிகளைக் கடத்திச் சென்ற செய்தி தேசத்தின் கவனத்தை ஈர்த்தது சமீபத்தில். மிரட்டிப் பணம் பறிக்கும் பொருட்டுத் தொழிலதிபர்களைக் கடத்திச் செல்வதற்காகவே ஒரு கூட்டம் சில காலமாகவே செயல்பட்டு வருகிறது.

தில்லியின் எல்லை முடிந்து, உ. பி. எல்லை தொடங்கும் இடத்தில் நியூ ஒக்லா இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் ஏரியா (NODIA) என்கிற இடத்தில் ஏராளமான தொழிற்சாலைகள் தொடங்கி நடத்தப்படுகின்றன. ஆனால் தொழிலதிபர்கள் வசிக்குமிடமோ தில்லிதான். அவர்கள் தினமும் NODIA செல்லுகையில் வழியில் அவர்களைக் கடத்துவது எளிதாயிருக்கிறது.

''இதுவரையில் 33 பேரைக் கடத்திப் பணம் பறித்து விட்டார்கள். நிலைமை மோசமாகிக் கொண்டுதான் இருக்கிறது'' என்கிறார் பாத அணிகளை ஏற்றுமதிக்காக உற்பத்தி செய்யும் ஒரு தொழிலதிபர். கடத்தல்காரர்கள் கேட்கும் பணத்தைக் கொடுத்து விடுபடுவதே நல்லது என்று நினைக்கிறார்கள் தொழிலதிபர்கள். போலீஸுக்குத் தெரிவித்து விளம்பரப்படுத்தினால் உயிருக்கு ஆபத்து வருவதோடு, தொடர்ந்து தொந்தரவுகள் ஏற்படலாம் என்றும் பயப்படுகிறார்கள்.



வக்கீல் : உங்க சொத்தோட மதிப்பு சுமாரா எவ்வளவு இருக்கும்?

கட்சிக்காரர் : எதுக்காகக் கேட்குறீங்க?

வக்கீல் : ஒண்ணுமில்ல, கேஸை இதோட முடிச்சிடலாமா? இல்லே, இன்னும் இழுக்கலாமான்னு முடிவு செய்யத்தான்.

- செங்குன்றம் ஜெமால்.

இந்தக் கடத்தல் கூட்டத்திற்குச் சில அரசியல் புள்ளிகளின் ஆசீர்வாதம் உண்டு என்றும் கருதப்படுகிறது. நெருப்பில்லாமல் புகையுமா?

## ஏழை பங்காளர்கள்?

அரசியல்வாதிகள் எல்லாம் ஏழை வேஷம் போட்ட காலம் இப்போது மலை யேறி விட்டது. தேவிலால் போன்றவர்கள் நிருபர்களை அழைத்துப் பெரிய மரப் பெட்டி நிறையத் தங்கக் கிரீடம், வெள்ளிச் செங்கோல், பணநோட்டு மாலைகளைக் காட்டிப் பெருமைப்படுகிற காலம் வந்திருக் கிறது. விவசாயிகள் கொடுத்ததென்கிறார். விவசாயிகளால் இவருக்குக் கனகாபி ஷேகம் செய்ய முடியுமென்றால் வங்கிக் கடனை மட்டும் ஏன் திருப்பிக் கொடுக்க முடியாது என்பதை இவர் விளக்கவில்லை.

இறக்கும்வரை எம். பி. யாகவே இருந்து சாதனை படைத்த பாபு ஜெகஜீவன்ராம் 'வரி கட்ட மறந்தா'லும் விட்டுச் சென்ற சொத் தின் மதிப்பு ரூபாய் 300 கோடி. சேரிகளே நிறைந்த சாசரம் கிராமத்தில் இவரது மாளிகை அரண்மனையிலும் பெரிது. இந்தச் சொத்துக்கு மகனும் மருமகளும் அடித்துக் கொள்கிறார்கள்.

இன்னொரு ஜெகஜீவன்ராமாய்ப் பெய ரெடுக்க விரும்பும் ராம் விலாஸ் பாஸ்வான் பற்றிய சமீபத்திய தலைமைக் கணக்காயரின் (CAG) குற்றச்சாட்டு, மனத்தைக் கசக்கச் செய் கிறது. இவர் அமைச்சராயிருந்த காலத்தில் அனுமதிக்கப்பட்ட பணவரம்பை மீறி ஏர் கண்டிஷனர்கள், கலர் டீ. வி., அலங்கார திரைச் சீலைகள், சோபா செட்டுகள், ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட சொகுசு டாக்ஸி என்று கணக்கு வழக்கில்லாமல் பொதுச் சொத்தை விரயம் செய்திருக்கிறார். அதோடு மட்டுமின்றி, பதவியிழந்த போதும் இவற் றைத் திருப்பிக் கொடுக்க மறுக்கிறார். கேட்டால், ராஜீவ் படுகொலையை ஒட்டி, இவர் வீட்டுக்குச் சில விஷமிகள் தீவைத்த போது அதில் எல்லாம் எரிந்து போய்விட்ட தாகச் சொல்கிறார்.

## தீண்டப்படாத சொல்

காந்திஜி உருவாக்கிய ஹரிஜன் என்ற சொல்லைத் தமிழ்நாட்டில் 'ஆதி திராவிடர்' என்று மாற்றிச் சில காலமாயிற்று. இப்போது பீஹார் மாநிலமும் இந்த வார்த் தையைத் தலையைச் சுற்றி வீசியெறிந்து விட்டது. வட இந்தியப் பத்திரிகைகளோ 'தலித்ஸ்' (Dalits) என்று குறிப்பிடுவதையே நாகரிகமாய்க் கருதுகின்றன. 'பெரியோர் சொல் வார்த்தை'களை மட்டுமல்ல; பெரி யோர்களையே மறந்துவிடும் திறமை நமக் குண்டு. சமீபத்தில் பீஹார் மாநிலம் வெளி விட்ட பூதான இயக்கம் பற்றிய அறிக்கை யொன்றில் வினோபா பாவேயின் பெயரே குறிப்பிடப்படவில்லையாம்!

- இமயவரம்பன்.


### அடுத்த இதழில்...

●● துவக்கப் பள்ளிகள் :

அரசு ஆணை ஆண்களுக்கு அநீதியா?
- கவர் ஸ்டோரி

●● சாணக்யா :
- சிறப்புப் பேட்டி




# விரக்திதரும் கேள்விகளுக்கு வெளிச்சம்தரும் விடைகள்




## இன்வெஸ்டார்ஸ் கில்டின் உறுப்பினராவதன் மூலம், நீங்கள் விரக்தியின் பிடியிலிருந்து விலகிட முடியும்.

உங்களைப்போன்ற முதலீட்டாளர்கள் இத்தனை காலமாய்த் தேடிக் கொண்டிருந்தது தான் இன்வெஸ்டார்ஸ்கில்ட். இதன் அங்கீகரிக்கப்பட்ட உறுப்பினராக ஆவதால், ஷேர்களை மதிப்பிடும் சீரிய திறன்வாய்ந்த சேவைக்கு நீங்கள் உரியவராகிறீர்கள். அதுமட்டுமா, புரோக்கர்களுடன் இன்னும் நெருங்கிய தொடர்பு, நிபுணத்துவம் வாய்ந்த முதலீட்டு ஆலோசகர்கள் மற்றும் ஸ்டாக் புரோக்கர்களின் சேவை என்று பலவும் உங்களுக்கு கிடைக்கின்றன.

கீழ்க்கண்ட சேவைகளனைத்தும் உங்களுக்கு மிகக் குறைந்த கட்டணத்தில் கிடைக்கின்றன.

1. இன்வெஸ்டார்ஸ் கில்டின் அங்கீகரிக்கப் பட்ட கிளைகள் மூலம், ஷேர்கள் மற்றும் செக்யூரிட்டிகள் வாங்குதல் மற்றும்விற்பனை வசதி.
2. ஷேர்கள் பதிவு மற்றும் மாற்றங்கள்.
3. வங்கி அங்கீகாரம் பெற்ற சில குறிப்பிட்ட ஷேர்களை வாங்கக் கடனுதவி.
4. டிவிடெண்ட் வாரண்டுகள், வட்டி போன்றவற்றை வங்கி மூலம் வசூலித்துத்தரும் சிறப்புச் சேவை.
5. கம்பெனி ஷேர்களை மதிப்பிடுதல்.கண்காணித்தல், ஆலோசனை வழங்குதல் மற்றும் வழிகாட்டுதல் போன்ற நிபுணத்துவம் வாய்ந்த சேவைகள்.

இவைதவிர கீழ்க்கண்ட இலவச சேவைகளும் உண்டு.
உங்கள் செக்யூரிட்டிகளுக்கு சிறந்த தோர் பாதுகாப்பு.




பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை, இன்வெஸ்டார்ஸ் கில்டிலிருந்து உங்களுக்கொரு செய்தி மடல் அனுப்பப்படும். அம்மடலில்,
ஸ்டாக் மார்க்கெட்டின் மிக சமீபத்திய நிலை,
அதிமுக்கிய கம்பெனிகள்
செயலறிக்கை பற்றிய ஆய்வுகள் மற்றும்
பரிந்துரைகள் போன்றவை அடங்கும்.



**The Catholic Syrian Bank Limited**

Head Office: St. Mary's College Road,
P.B.No. 502, Thrissur - 680 020.

Write or call in person for further details:
The Manager, The Catholic Syrian Bank Ltd.,

**BOMBAY** : No. 53, East & West Building, P.B.No.1900, Fort, Bombay - 400 023, Ph : 2860239/2860116 **BANGALORE** : St. Patricks Shopping Arcade, Brigade Road, P.B.No.2609, Bangalore-560 025, Ph : 576204/561142 **NEW DELHI** : G-40, Connaught Circus, New Delhi-110 001, Ph : 3324926/3328747 **THIRUVANANTHAPURAM** : P.B.No.5516, University Campus PO, Thiruvananthapuram-695 034, Ph : 77393/75945 **COCHIN** : M.G.Road, P.B.No.3522, Cochin-682 035, Ph : 354410/360207 **MADRAS** : P.B.No.3796, No.826, Tarapur Towers, Mount Road, Madras-600 002, Ph 847002/833117 **THRISSUR** : Round South, P.B.No.7, Thrissur-680 001, Ph : 23778/23840

SA9/T20/C38/91

# டைரக்டர் ஸ்ரீதர்: 'திரும்பிப் பார்க்கிறேன்'

நீங்கள் நடுத்தர வயதினராய் இருந்தால் சரி; இளைஞர் எனில், உங்கள் அப்பா, அம்மாவிடம் கேளுங்கள் : ''கல்யாணப் பரிசு பார்த்திருக்கிறீர்களா?''

உங்கள் தாயார் கண்களை மூடிக் கொண்டு பழைய நினைவுகளில் ஆழ்ந்து ஒரு பெருமூச்சு விடுவார்.

உங்கள் தகப்பனார் கிளாஸ் 'கட்' அடித்து விட்டு இரண்டு மூன்று தடவை கல்யாணப் பரிசு சினிமா பார்த்ததை ஒப்புக் கொண்டால் கூட வியப்பதற்கில்லை!

அப்படி ஒரு வரவேற்பைப் பெற்ற படம்.

'கல்யாணப் பரிசு' என்று சொன்னால் டைரக்டர் ஸ்ரீதர் நினைவுக்கு வருவார். 'டைரக்டர் ஸ்ரீதர்' என்று சொன்னால் கல்யாணப் பரிசு நினைவுக்கு வரும்.

காரணம், ஏற்கெனவே சில வெற்றிப் படங்களுக்காகத் தயாரிப்பாளர் மத்தியில் நான் ஒரு கதை வசனகர்த்தா என்ற முறையில் அங்கீகாரம் பெற்றிருந்தாலும் மக்கள் மத்தியில் டைரக்டர் ஸ்ரீதருக்கு அங்கீகாரம் கிடைத்தது ''கல்யாணப் பரிசு'' மூலமாகத் தான்.



எனவே நான் கடந்து வந்த கலைப் பாதையைத் திரும்பிப் பார்க்கும் போதும் ''கல்யாணப் பரிசு'' என்ற காலகட்டத்திலேயே தொடங்குகிறேன்.

மக்களிடம் இந்த ஏகமனதான அங்கீகாரத்தைப் பெறுவதற்கு முன் நானும் என்னுடைய கல்யாணப் பரிசும் என்ன பாடுபட வேண்டியிருந்தது என்பதுதான் வேடிக்கை! மகத்தான வரவேற்பைப் பெற்ற இந்தப் படத்தின் கதைக்கே படத்தயாரிப்பாளரிடம் அங்கீகாரம் கிடைக்கவில்லை என்றால் நம்ப முடிகிறதா? ஆனால் அதுதான் உண்மை! அதைவிட ஆச்சர்யமான உண்மை ஒன்று உண்டென்றால் அது நான் எப்படி டைரக்டரானேன் என்பது! சொல்கிறேன் கேளுங்கள் :

ஓர் ஆணை ஒரு பெண் காதலிப்பதில் என்ன த்ரில் இருக்கிறது? ஓர் ஆணை இரு பெண்கள் காதலிக்க வேண்டும். அவர்களில் ஒருத்தி மற்றொருத்திக்காகத் தன் காதலையே தியாகம் செய்ய வேண்டும். அந்த இரு பெண்களும் சகோதரிகளாக இருந்து விட்டால் அந்தத் தியாகத்துக்கு வலிமை மேலும் சேரும்.

இதுதான் கதைக் கரு. சிந்திக்கச் சிந்திக்கக் கதையும் காட்சிகளும் என் உள்ளத்தில் உருவாயின.

கிருஷ்ணமூர்த்தி, கோவிந்தராஜன், நான் மூவரும் வீனஸ் பிக்சர்ஸ் பங்குதாரர்கள். வெற்றிப் படங்களான 'அமரதீபம்'. 'உத்தமபுத்திரன்' ஆகியவற்றுக்குப் பிறகு திரைக்கதை தேடிக் கொண்டிருந்த நேரம். ''கல்யாணப் பரிசு'' கதையை நான் உணர்ச்சியோடு சொல்லி முடித்தேன். ஆனால் கிருஷ்ணமூர்த்தி முகத்தில் எந்த உணர்ச்சியையும் காணோம்! அவர் என்னை ஒரு குற்றவாளியைப் பார்ப்பது போல் பார்த்தார்.

''ஸ்ரீதர்! எழுத்தாளர்கள் இன்னொருத்தர் கதையைத் திருடறது சகஜம். ஆனா நீ உன் கதையையே திருடறியே!''

எனக்கு 'திக்' என்றிருந்தது. ''என்ன

சொல்றே, கிருஷ்ணமூர்த்தி?''
''அமரதீபம் நீ எழுதின கதைதானே?''
''ஆமாம்.''
''அதிலே பத்மினி, சாவித்திரி ரெண்டு பேரும் சிவாஜியைத்தானே காதலிக்கிறாங்க?''
''அது ஒரு கோணத்தில் எழுதப்பட்டது. இது...''
''ரெண்டுமே முக்கோணம்தானே!'' என்றார் கிருஷ்ணமூர்த்தி. ''வீனஸ் பிக்சர்ஸுக்கு வேற நல்ல கதை 'திங்க்' பண்ணு. இதை எவனாவது ஏமாந்தவனாப் பார்த்து அவன் தலைல கட்டு!''

**நா**ன் ஏமாற்றமடையவில்லை. ஏனென்றால் என் 'நேச்சர்' அப்படி. நாடக உலகைக் கடந்து பட உலகில் புகுந்திருந்தேன். பெரிய எதிர்பார்ப்புக்களை நான் வளர்த்துக் கொண்டிருக்கவில்லை. 'வந்தால் சரி, போனாலும் சரி' என்ற மனோபாவம். குடும்பக் கவலை ஏதும் இல்லாதது இதற்கு மேலும் உதவியது.

இந்தச் சமயத்தில், ''பணக்காரி'', ''சக்கரவர்த்தி திருமகள்'' போன்ற பெரிய படங்களைத் தயாரித்திருந்த உமா பிக்சர்ஸ் நிறுவன அதிபர் ராமநாதன் செட்டியார், கார் அனுப்பியிருந்தார். போனேன். ''கதை வேண்டுமே'' என்றார்.

''ரெடி, ரெடி!'' என்றேன். கல்யாணப் பரிசு கதைதான் தயாராயிருக்கிறதே. உணர்ச்சிகரமாகக் கதையைக் கூறி முடித்தேன். டைரக்டர், தயாரிப்பாளரைப் பார்க்க, தயாரிப்பாளர் மோட்டு வளையைப் பார்க்க... என்ன ஆச்சு இவர்களுக்கு? ராமநாதன் செட்டியார் மெல்லத் தலையை இறக்கி, ''சிவாஜி, வைஜெயந்தி, பத்மினி இப்படி பெரிய ஸ்டாருங்களைப் போட்டு எடுக்கிற அளவுக்குக் கதையில் வலு இல்லையே'' என்றார்.

நான் எழுந்து கொண்டேன்.

**ஒ**ருநாள் கிருஷ்ணமூர்த்தி, ''படம் சீக்கிரம் ஆரம்பிக்கணும். கதை ஏதாவது யோசிச்சியா?'' என்றார்.



வீனஸ் கிருஷ்ணமூர்த்தி



சித்ராலயா கோபு



கல்யாணப் பரிசு

''முன்னே சொன்னேனே ஒரு கதை; அதையே மறுபடியும் சொல்றேன்.''

''அந்த ரெண்டு பெண்ணு; ஒரு ஆம்பிளை கதைதானே?''

''ஆமா, ஆனா கதையை நல்லா டெவலப் பண்ணியிருக்கேன். எனக்கு நம்பிக்கை இருக்கு'' என்றேன்.

இப்படி நான் உறுதியாகப் பேச ஒரு காரணம் இருந்தது. ஒரு நாள் ஒளிப்பதிவாளர் வின்சென்ட், உதவி ஒளிப்பதிவாளர் சுந்தரம், ஸ்டில் திருச்சி அருணாசலம், 'சித்ராலயா' கோபு ஆகியோருடன் கடற்கரையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தேன்.

அப்போது, ''ஒரு கதை சொல்றேன் கேட்கறீங்களா?'' என்று நான் கூற, கோபு,

வின்சென்ட்



''வேறு ஏதாவது இன்டரஸ்டிங்காகப் பேசலாமே'' என்று வழக்கம் போல் கிண்டலடித்தார்.

நான் விடுவதாக இல்லை. நான் சொன்ன கதை - வேறென்ன? கல்யாணப் பரிசுதான்!

கேட்டார்கள்.

''இந்தக் கதையையா கிருஷ்ணமூர்த்தி நிராகரிச்சார்?'' என்று ஆளுக்கு ஆள் அனு



நண்பர்: இந்தப் படத்துக்கு என்ன உங்களோட பேரையே வெச்சுட்டீங்க?
டைரக்டர்: பேர் சொல்ற மாதிரி படம் எடுக்கச் சொல்லிப் பல பேர் வற்புறுத்தினாங்களே...!
– சீர்காழி வி. ரேவதி



''அந்தாளு ஆபீஸ்ல தூங்கறதைக் கூடப் பொறுத்துக்கலாம்... ஆனா...''
''குறட்டை விடறதுதான் பெரிய ஹிம்சையாகும்!''
''அது கூடப் பரவாயில்லையே... 'பாதித் தூக்கத்தில் எழுப்பினால் கொலை விழும்'னு முதுகில் வாசகம் போட்ட பனியன் போட்டிருக்கான்...!''
– ஞா. ஞானமுத்து.



நர்ஸ் 1 : வாங்கின காசுக்கு வஞ்சனை இல்லாமல் உழைக்கிறவர் தான் நம்ம டாக்டர்.
நர்ஸ் 2 : எப்படிச் சொல்றே?
நர்ஸ் 1: கத்தியை வச்சதுமே பேஷண்டுக்கு உயிர் போயிட்டுது. ஆனா அவர் தொடர்ந்து ஆபரேஷனைப் பண்ணிக்கிட்டிருக்கார் பாரேன்!
- ஆலத்தம்பாடி ராஜகோபால்

தாபத்தோடு துடித்தார்கள்!

அது மட்டுமல்ல! நானே படத்தை டைரக்ட் செய்ய வேண்டும் என்றும் அந்த நண்பர்கள் சொன்னார்கள்!

டைரக்ட் பண்ண வேண்டும் என்ற ஆர்வம் எனக்குள் ஏற்கெனவே இருந்த ஒன்றுதான். நான் கதை - வசனம் - எழுதிய படங்களின் ஷூட்டிங் சமயத்தில் நானும் செட்டில் இருப்பேன். 'இந்தக் காட்சியை இப்படி எடுக்கலாமே ; இன்னும் நன்றாய் இருக்குமே என்று எண்ணுவேன். அதை வின்செண்ட், கோபு ஆகியவர்களுடன் பகிர்ந்து கொள்வேன். அதனால் அவர்கள் என் ஆர்வத்தை அறிந்து இப்படி பேசினார்கள். ஆனால் எனக்குள் சிறு தயக்கம். இவ்வளவு சீக்கிரம் டைரக்ஷன் பொறுப்பு ஏற்பதா? அவ்வளவு அனுபவம் எனக்குக் கிடைத்திருக்கிறதா? எப்படியானாலும் கோபுவோ, வின்செண்டோ சொல்லி நான் டைரக்டர் ஆகி விட முடியுமா? கிருஷ்ணமூர்த்தி அல்லவா தீர்மானிக்க வேண்டும்?

இரண்டாவது முறையாகக் கதையைக் கேட்டார் கிருஷ்ணமூர்த்தி. அவர் மனம் அப்படி ஒன்றும் மாறி விட்டதாகத் தெரியவில்லை! ஆனால் படம் எடுக்காமல் தாமதமாவது தவிர்க்கப்பட வேண்டுமே. ''சரி, வேற வழியில்லை போலிருக்கு ; இதையே எடுப்போம்!'' என்றார்.

அப்போது அருகில் இருந்த நண்பர்கள், ''படத்தை ஸ்ரீதரே ஏன் டைரக்ட் செய்யக் கூடாது?'' என்று கேட்டார்கள்!

இந்தக் கதையை வேறு யாராவது டைரக்ட் செய்து அவர்களுக்குக் கெட்ட பெயர்வருவதற்குப் பதில், ஸ்ரீதருக்கே வந்து சேரட்டுமே என்று எண்ணினாரோ என்னவோ, அதற்கும் 'சரி' என்று கூறி விட்டார் கிருஷ்ணமூர்த்தி!

அவர் அரைமனதுடன் பேசுவது எனக்குப் புரிந்தது.

நான் அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டேன். என்னுள் டைரக்ட் பண்ண வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. அதற்கான வேளையும் வந்து விட்டது. ஏற்கத்தானே வேண்டும்! தயங்குவது முட்டாள்தனம்.

நான் சொன்னேன் : ''ஒரு ஷெட்யூல் டைரக்ட் செய்கிறேன். படம் பார்ப்போம். நன்றாக இருந்தால் தொடர்ந்து டைரக்ட் செய்கிறேன். இல்லையென்றால் வேறு யாராவது செய்யட்டும்!''

என்னுடைய இந்த தன்னம்பிக்கைக்கும் ஒரு பின்னணி உண்டு! அது ஒரு சீசன் டிக்கெட் விவகாரம்!

சீசன் டிக்கெட்டா? அதற்கும் டைரக்ஷனுக்கும் என்ன சம்பந்தம்?

அடுத்த வாரம் சொல்கிறேன்!

படங்கள் உதவி :
பிலிம் நியூஸ் ஆனந்தன்

# நாடி வந்த நல் வாய்ப்பு!..

நான் ஒரு தனியார் கம்பெனியில் வேலை செய்து கொண்டிருக்கிறேன். பள்ளியில் தமிழ் மீடியத்தில் படித்த தனால் இங்கிலீஷ் கிராமர் என்றால் எனக்கு கொஞ்சம் அலர்ஜி.

ஒவ்வொரு வருடமும் பரீட்சைக்குத் தேவையான இங்கிலீஷ் சம்மரிகளைப் படித்து, மனப்பாடம் செய்து, பரீட்சை களில் எப்படியோ பாஸ் செய்து விட்டேன். ஆனால்...



படிப்பை முடித்து விட்டு, வேலைக் குச் சென்றபோதுதான் ஆங்கிலத்தின் அவசியத்தை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

எங்களது ஹெட் ஆபீஸிலிருந்து வரும் அதிகாரிகள் ஆங்கிலத்தில் கேட் கும் கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் பேச முடியவில்லையே என்று பல சமயங்களில் வேதனைப்பட்டதுண்டு.

மேலும் அலுவலகத் தொடர்பான கடிதங்கள் எழுத அடுத்தவர்களது உதவியை நாடும் போது, இத்தனை வருஷம் சர்வீஸ் ஆகிறது இது கூடத் தெரியவில்லையே" என்று அவர்கள் ஏளனமாகப் பேசுவதைக் கேட்கும் போது, எனக்கு அழுகையே வந்துவிடும்.

என்ன செய்யலாம் என்று யோசித் துக் கொண்டிருந்தபோது அதிர்ஷ்ட வசமாக விவேகானந்தா கல்வி நிலையத் தின் விளம்பரம் கண்ணில் பட்டது.

இது என்னை நாடி வந்துள்ள நல்ல வாய்ப்பு என்ற நம்பிக்கையுடன் விவேகா னந்தா கல்வி நிலையம் நடத்தும் தபால் முறைப் பயிற்சியில் சேர்ந்தேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை. ஆம்...

ஆங்கில இலக்கணத்தை அனைவருக் கும் புரியும் வகையில் அறிமுகப்படுத்தி, வாக்கியங்களை அமைக்கும் முறை பற்றி எளிய முறையில் சொல்லிக் கொடுத்து, தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச பல பயிற்சிகளைத் தொகுத்து வழங்கி, ஓர் ஆசிரியர் நம்மிடம் நேரில் உரையாடுவதைப் போல பயிற்சி முறை மிகவும் எளிய முறையில் அமைக்கபபட்டுள்ளது.

ஆர்வமுடன் இப்பயிற்சியை மேற் கொண்டதன் பலனாய் இப்பொழுது என்னால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடிகிறது. இலக்கணப் பிழை ஏற் பட்டு விடுமோ என்ற பயமின்றி கடி தங்கள் எழுத முடிகிறது.

மிகக் குறுகிய காலத்தில் என்னை ஆங்கில மொழியில் புலமை பெறச் செய்த விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன்.

Mrs. S. விசாலாட்சி

---

நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலப் பயிற்சி பெறலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு.

விவரங்களுக்கு கீழ்க்கண்ட முகவரியில் உடனே தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**தபால் பெட்டி எண்: 4986**
**9, நடேசன் தெரு, தி. நகர்,**
**சென்னை-600 017.**

NAGA

# இட ஒதுக்கீடு: வோட்டுப் பிடிக்கும் உபாயம்!

இட ஒதுக்கீடு என்பது இன்று வோட்டுப் பிடிக்கும் ஓர் உபாயமாகி விட்டது. மண்டல் அறிக்கையை அமல்படுத்த ஜனதா தளமும் தி. மு. க. வும் ஆர்ப்பாட்டம் செய்கின்றன. அவர்களையும் விட அதிகமான அக்கறை, பிற்படுத்தப்பட்டோர் நலனில் தனக்கு உண்டு என்று காண்பித்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்த நிலைக்கு, மத்திய காங்கிரஸ் அரசு தள்ளப்பட்டது. நிகர விளைவு என்னவெனில், ஒதுக்கீடு என்பது, இன்று வரலாறு காணாத அளவில் அறுபது சதம் ஆகி விட்டது! மண்டல் அறிக்கையே அதிகபட்சம் ஐம்பது சதம் ஒதுக்கீடுதான் சிபாரிசு செய்கிறது என்பதைப் பார்க்க, அரசியல் உள்நோக்கங்கள் தெளிவாகின்றன.

வி. பி. சிங் ஆட்சியில் மண்டல் அறிக்கை அமலாவதை எதிர்த்து மாணவர்கள் செய்த கிளர்ச்சி, தீக்குளிப்பு முதலியவற்றை மறக்காத மைய அரசு, முற்படுத்தப்பட்டோரிலும் பொருளாதாரத்தில் பின்தங்கியோருக்குப் பத்து சதம் ஒதுக்கீடு என அறிவித்துள்ளது. இதற்கெல்லாம் உச்சநீதி மன்றம் என்ன சொல்லப் போகிறது; இட ஒதுக்கீட்டின் இறுதி வடிவம் என்னவாக இருக்கும் என்பதெல்லாம் ஒருபுறமிருக்க, அடிப்படையான ஆபத்துக்கள் இரண்டு இருப்பதை மறுப்பதற்கில்லை!

ஒன்று, இட ஒதுக்கீடு, ஜாதி மத வேற்றுமைகளை நிரந்தரப்படுத்துகிறது. இரண்டு, இட ஒதுக்கீடு திறமைக்குத் தடை விதிக்கிறது.

'அவர்கள்தான் திறமைசாலிகளாச்சே, வேறு எங்கோ எப்படியோ பிழைத்துக் கொள்ளட்டுமே' என்று வாதாடலாம். பிரச்னை அதுவல்ல. கல்வி நிலையங்களோ, அரசு இலாக்காக்களோ திறமைசாலிகளை இழப்பது என்பது தேசத்துக்குப் பேரிழப்பு என்பதுதான் கவனத்துக்குரியது.

அப்படியானால் இட ஒதுக்கீடு என்பதே கூடாதா? ஆண்டாண்டு காலமாகப் பிற்படுத்தப்பட்ட சமுதாயம் என்று இங்கே இருந்து வந்திருக்கிறதே? அவர்களுக்கு என்ன பதில்? அவர்கள் மற்றவர்களுக்குச் சமமாக உயர வாய்ப்புத் தரப்பட வேண்டாமா?

தரப்பட வேண்டும்தான் ; இட ஒதுக்கீடும் தேவைதான். ஆனால் ஒதுக்கீடு எந்த நோக்கத்தில் உருவாக்கப்பட்டது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். பிற்படுத்தப்பட்டவர்கள் பிறருக்கு நிகராக உயர அவகாசம் அளிக்கவே இட ஒதுக்கீடு. அந்தக் கால கட்டம் வரை அவர்களுக்குச் சில சலுகைகள்.

பிறருக்கு நிகராக உயர்வது என்றால் எப்படி? ஜாதியிலா? பொருளாதாரத்திலா? இரண்டும் இல்லை. உலகில் ஜனநாயக நாடு எதிலுமே (ஏன் கம்யூனிச நாடுகளில் கூட) பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நீக்குவது சாத்தியமில்லை. ஆனால் ஏற்றத் தாழ்வு என்ற மனோபாவத்தை அடியோடு நீக்கி விடுவது சாத்தியமே! ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு ஒரு தொழிலதிபர் எவ்வளவு முக்கியமோ அதே அளவுக்கு ஸ்பானர் பிடிக்கும் ஒரு தொழிலாளியும், ஏர் பிடிக்கும் ஒரு விவசாயியும் முக்கியம் என்பதைப் புரிந்து கொண்டால், ஏற்றத் தாழ்வு என்ற மனோபாவங்கள் நீங்கி விடும். உயர்வு மனப்பான்மை, தாழ்வு மனப்பான்மை எல்லாம் போய் விடும். எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் நிறை, எல்லோரும் இந் நாட்டு மன்னர் என்பது உண்மையாகும்.

இதைத்தான் மேல்நாடுகள் பலவற்றில் சாதித்திருக்கிறார்கள். எப்படி சாதித்தார்கள்? வாழ்க்கைக்குப் பயன்தரும் கல்வி அளிப்பதன் மூலம் சாதித்தார்கள்.

வெறும் படிப்பறிவு மட்டும் அல்ல; தரமான கல்வி. தன்னம்பிக்கையை வளர்க்கும் கல்வி; உடல் உழைப்பைக் கேவலம் என்று கருதாத கல்வி; தேச பக்தியை, இறையுணர்வை, மனிதாபிமானத்தை வளர்க்கும் கல்வி.

44 ஆண்டுகளில் அரசு நிறுவனங்கள் பட்ட நஷ்டங்களையெல்லாம் தவிர்த்து, அந்தப் பணத்தைக் கல்வித் துறைக்குத் திருப்பி விட்டிருந்தால், பாடத் திட்டத்தையும் சரியானபடி வகுத்திருந்தால், இங்கு ஒரு யுகப் புரட்சி நடந்திருக்கும். "இட ஒதுக்கீடு எங்களுக்கும் செய்யுங்கள்" என்று கிளர்ச்சி செய்வதற்குப் பதில், "எங்களுக்கு இந்த இட ஒதுக்கீடு வேண்டாம்; நிறுத்துங்கள்" என்று அனைவருமே சொல்வார்கள்! இட ஒதுக்கீட்டுச் சலுகை பெறுவதை அவமானமாக, கௌரவக் குறைவாக ஒவ்வோர் இந்தியனும் கருதுவான்.

இனியேனும் அரசு விழித்துக் கொள்ளட்டும். 60 சதம் ஒதுக்கீடு, 90 - 95 சதமாக வளர்வதற்கு அனுமதியாமல் ஒரு காலக் கெடு நிர்ணயிக்கட்டும். அதற்குள் மக்களின் மனோபாவம் மாறவும், சமத்துவ உணர்வு ஏற்படவும் உரிய நடவடிக்கை எடுக்கட்டும்.



கல்கி



1991
அக்டோபர் 6
மலர் : 50
இதழ் : 10
பிரஜோத்பத்தி
புரட்டாசி 20

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# நீ பாதி நான் பாதி

ஒரு சிறுகதைபோடு படம் துவங்குகிறது.

பஸ்ஸில் பக்கத்து இருக்கை பெண்மணியின் மடியிலிருக்கும் குழந்தையைக் கௌதமி கொஞ்ச, தாயிடமிருந்து தடுக்கும் முயற்சி. இடைவெளி. அனிச்சையாக மறுபடியும் கௌதமியின் கொஞ்சல்; தடுக்கப்படுதல். இம்முறை கௌதமிக்குச் சக பயணியின் வக்காலத்து. தாயின் அடுத்த இருக்கைப் பெண் இதற்குத் தழுதழுத்துப் பதில் சொல்கிறார்: ''குழந்தை செத்துப் போச்சும்மா. ஆட்டோவுல போகக் காசில்ல. குழந்தைக்கு அப்பா அவளை ஏமாத்திட்டு ஓடிட்டான். எங்க கஷ்டம். எங்க வேதனை. இந்த நேரத்தில கொஞ்சினா அனுமதிக்க முடியுமா?''



மனசைத் தொடும் துவக்கம் தான் என்றாலும் கதை, போகப் போக ஊசலாடித் தத்தளிக்கிறது.

கௌதமியை நோக்கி ரகுவின் காதல் துரத்தல்கள், ரகுவை நோக்கி ஹீராவின் காதல் துரத்தல்கள், குறும்புகள்... சினிமாவின் தற்கால சாஸ்திரமாகி விட்டிருக்கிறது. ஆனாலும் இவர்களை, நடிப்பில் சொற்ப நேரத்தில் ஜெயித்து விடுபவர்கள் டெல்லி கணேஷ், ஜெய்சங்கர், மனோரமா.

காட்சிகளின் மாடர்னிட்டி வசீகரமான பகுதி. அதற்குத் துணை போகிறவர்கள் ஒளிப்பதிவு கணேஷ், எடிட்டிங் கணேஷ் - குமார். படத்தில் இருக்கும் சிறப்பு இவர்களுக்கே பங்கிடப்படுகிறது.

ஜனகராஜ் - மனைவிக்குப் பயப்படும் கணவன்; காலம் வந்ததும் மனைவியை மிரட்டும் பாத்திரம். என். எஸ். கே. காலத்துக் கற்பனை.

இசை மரகதமணி (அறிமுகம்?) மயிரிழையில் வெண்கலப் பதக்கம் பெறுகிறார். உழைத்தால் உயர்வுண்டு. பின்னணிக் குரலில் நிழல்கள் ரவி - வைஷ்ணவி ஜோடி.

ஒரு படவுலக நண்பர் சொன்னது போல, தமிழ் சினிமாவில் திறமையான காமிராமேன் இருக்கிறார்; டைரக்டர் இருக்கிறார்; எடிட்டர் மற்ற டெக்னீஷியன்கள் எல்லாம் இருக்கிறார்கள். நல்ல ஆர்ட்டிஸ்டுகளும் இருக்கிறார்கள். வளர்ந்த விஞ்ஞானத்தின் தொழில் நுட்பமும் இருக்கிறது. இல்லாதது ஒன்றே ஒன்றுதான்: தெளிவான, வலுவான கதை!

- சுந்தர்ஜி.

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது . மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்..
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.

## இதுவரை...

வள்ளிக்குப்பம் என்கிற குக்கிராமத்தில் 'விஸாட்'டை நிறுவுவதற்கான கம்ப்யூட்டர் சாதனங்களுடன் பம்பாயிலிருந்து வருகிறார்கள் மனோஜும், ஷண்பேகரும். மனோஜ் திருமணமான கையோடு மனைவி ப்ரமிளாவையும் அழைத்து வருகிறான்.

'விஸாட்'டை நிறுவுவதற்கான இடத்தில் ஒரு மரம். அதில் முனீஸ்வரன் குடியிருப்பதாக நம்பி கிராம மக்கள் அம் மரத்தை வழிபட்டு வருகிறார்கள். கருவிகளை நிறுவ மரத்தை வெட்டியே ஆக வேண்டும் என்கிறார்கள் மனோஜும், ஷண்பேகரும். கிராம மக்கள் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள்.

நடேச பண்டிதர் என்கிற ஊர்ப் பெரியவரைக் கொண்டு, மக்களைச் சமாதானப்படுத்தி, மரத்தை வெட்டி விடலாம் என்று அவர் துணையை நாட, அவர், ஒரு பெண் குழந்தையை நரபலி கொடுத்துத் தான் மரத்தை வெட்ட வேண்டும்; அதற்கு இருபதாயிரம் ரூபாய் பணம் செலவாகும் என்கிறார். மனோஜ் அதிர்ச்சியடைகிறான்.

யில் என் ப்ரொபஸர் அவர் மகளை என்னுடன்தான் அனுப்பி வைத்தார். ரொம்ப நம்பகன் நான்!''

''ஷண், எனக்கு இருக்கிற பிரச்னை போதும். நீ வேறு, பாஷை தெரியாமல் எங்கேயாவது கை வைத்து, கிராமத்தின் கோபத்துக்கு உள்ளாகி விட்டால், ஏற்கெனவே நரபலி, அது, இது என்று பேசுகிறார்கள்...''

''நரபலியா?''

''ஆம். அந்த நடேச பண்டிதர் அதுதான் சொன்னார். நரபலி கொடுத்து ப்ரீதி பண்ண வேண்டுமாம், முனீஸ்வரனுக்கு!''

''இண்ட்ரஸ்டிங்!''

''இண்ட்ரஸ்டிங்! அவ்வளவுதானா உனக்கு? நரபலி, ஷண்பேகர்! ஒரு குழந்தையைப் பலி கொடுக்க வேண்டுமாம்! அதற்கு நாம் பணம் கொடுக்க வேண்டுமாம்!''

''வெரி இண்ட்ரஸ்டிங்.''

''கொடுத்து விடலாம் என்கிறாயா?''

# கம்ப்யூட்டர் கிராமம்

## 10

**ஷ**ண்பேகருடன் திரும்ப வரும் போது இருட்டில் சைட்டைக் கடந்து செல்லும் போது, முனீஸ்வரன் மரத்தைக் கவனிக்க முடிந்தது. பொந்தில் அகல் விளக்கு வைத்திருந்தார்கள். கறுப்பாக இரண்டு பேர் வருவது போலவும் தோன்றியது.

''நான் என்ன செய்வது என்று மண்டையை உடைத்துக் கொண்டிருக்கும் போது, ஊரில் இருக்கும் பெண்களுடன் எல்லாம் அன்னியோன்னியம் பாவிக்கிறாய். இது எந்த விபரீதத்தில் கொண்டு விடும் என்று சொல்ல முடியாது. ஷண்! ஸ்டாப் இட் ஷண்!'' என்றான் மனோஜ்.

''நான் என்ன ஏதாவது அவர்களிடம் தப்பாக நடந்து கொண்டேனா?''

''நடந்து கொள்வாய்.''

''அப்படியெல்லாம் ஏன் உன் மனசுக்குள் கற்பனை பண்ணிக் கொள்கிறாய்? ஷண்பேகர் ரொம்ப நல்லவன். அவனிடம் எல்லாரும் கல்யாணமாகாத தங்கைகளை ஒப்படைக்கிறார்கள், தெரியுமா? ஐ. ஐ. டி.

''சே, சே! மனோஜ், நீ ரொம்பக் குழம்பியிருக்கிறாய்.''

''மரத்தை வெட்ட வேண்டுமே, என்ன செய்வது சொல்.''

''நீ சொன்னது போல் போலீஸ் பந்தோபஸ்துடன் காலையில் வெட்டி விடுவது. காவல் நிலையத்துக்குச் சென்று பந்தோபஸ்து கேட்கிறேன்.''

**அ**றை திரும்பிய போது, யாரோ உருவம் வாசலில் தெரிய கிட்டே பார்த்ததில் டிஸியின் மனைவி.

''என்ன?''

''ப்ரமிளா ரொம்ப அழுகிறாள். நீங்கள் வந்து சமாதானம் சொல்ல வேண்டும்.''

''என்ன ஆச்சு?''

''டோட்டுவைக் காணோம்!''

பதறிக் கொண்டு டிஸியின் வீட்டுக்குச் சென்றான். அவள் கூடத்தில் உட்கார்ந்து விசித்து விசித்து, சின்னப் பெண் போல

**சுஜாதா**

அழுது கொண்டிருக்க...

''என்ன ப்ரமிளா?''

''டோட்டு காணாமல் போய் விட்டது.''

''எப்போ?''

''காலையிலிருந்து.''

''எங்காவது வழி திரிந்திருக்கும். காலையில் வந்துவிடும்.''

''டோட்டு டோட்டு'' என்று ஒப்பாரி வைத்தாள்.

ஷண்பேகர், ''ஒரு நாய்... கவலைப் படாதே. ஜிம்மி என்ற ஒரு நாட்டு நாய் பார்த்தேன். ரொம்ப சமர்த்து. சைட்டில் இருக்கிறது. அதற்கு ப்ரொக்ராமிங் சொல்



லித் தந்து கொண்டிருக்கிறேன்...''

''ஷண், கொஞ்சம் சும்மா இருக்கி றாயா? அவள் டோட்டுவை ரொம்ப நேசிக் கிறவள்.''

''டோட்டு பெண்தானே, சூட்டில் இருக்கும். திரியப் போயிருக்கும்.''

''டோட்டு... டோட்டு...ஊ...''

மனோஜுக்கு இரண்டு பேர் பேச்சும் சகிக்கவில்லை. உள்ளுக்குள் டோட்டுவைக் காணோம் என்பதில் ஒருவித பய உணர்ச்சி தான் பாக்கியிருந்தது. டிஸியின் ஜீப்பை எடுத்துக் கொண்டு ஆரம்பாக்கம் வீதிகளில் ''டோட்டு'' என்று கூப்பிட்டுக் கொண்டே சென்றார்கள். ப்ரமிளா மூக்கு பழமாகச் சிவக்க அழுதுவிட்டு வந்து படுத்துக் கொண்டு விட்டாள்.

ஷண்பகர் காவல் நிலையத்துக்குப் போய் போலீஸ் இன்ஸ்பெக்டரை அழைத்து வந்தான். ''ரெண்டு விஷயம். ஒன்று டோட்டுவைக் காணவில்லை.''

''டோட்டு யார்?''

''என் நண்பனின் - ப்ராஜெக்ட் மானேஜ ரின் அருமந்த நாய். அதைக் காணவில்லை.''

''இரண்டாவது விஷயம் என்ன சொல் லுங்கள்?''

''நாளைப் போலீஸ் காவல் வேண் டும்.''

''எதற்கு?''

''மரம் வெட்டுவதற்கு.''

''வெட்டுவதாகத் தீர்மானித்து விட்டீர் களா?'' அவர் பார்வையில் விரோதம் பரவி யது.

''ஆம்.''

''மணியக்காரரைக் கேட்டீர்களா?''

''கேட்டோம். அவர் வெட்ட வேண் டாம் என்று சொன்னார். சின்னையாவோ, பொன்னையாவோ அவர்தானே?''

''மரத்தை வெட்டுவது உசிதமில்லை என்று தோன்றுகிறது. ஆவணி மாதத் திருவிழா வருகிறது. அதற்கு...''

''மரம் இருப்பது கவர்ன்மெண்டு நிலத் தில் என்று தெரியுமல்லவா?''

''நன்றாகவே. சைட்டை மாற்ற முடி யாதா?''

''முடியாது என்று எப்போதோ சொல்லி விட்டேனே...!''

''எதனால்?''

மனோஜ் ஆயாசமாக, ''ஸார், டெக் னிகல் ரீஸன் ஸார்...''

''டெக்னிகல் ரீஸன் சரி. நான் நாளைக்கு சிட்டியிலிருந்து ஏ.எஸ்.பி.யைப் பார்த்து அழைத்து வருகிறேன்.''

''போலீஸ் படையுடன் வாருங்கள்.''

''ராத்திரி வெட்டுவதே உசிதம்.''

''நீங்கள் எப்போது சொல்கி றீர்களோ...''

''அதற்கான ஆயத்தங்கள், ஆயுதங்கள் எல்லாம் இருக்கிறதா?''

''ஆயுதம் என்ன ஒரு ஹேக் ஸா போதும். ஒடிசலான மரம்.''

''ஆனால் ரொம்ப சக்தி வாய்ந்தது.''

''நீங்களே நம்புகிறீர்களா?''

''எனக்குப் பிள்ளை பிறந்ததே அந்த மரத்தை வேண்டிக் கொண்டதும்தானே?''

''லுக் இன்ஸ்பெக்டர்! நாம் நிறையவே பேசி விட்டோம். இனி காரியம். நாங்கள் வெட்டுகிறோம். எங்களிடம் பாவங்கள் வந்து சேரட்டும். நீங்கள் பாதுகாத்தால் மட்டும் போதும்.''

''சரி'' என்று அவர் சொல்லிவிட்டு, ''நாய் ஏதோ காணோம் என்று சொன் னீர்களே?''

''ஆம், டோட்டு என்று பெயர் படைத்த நாய். இவன் மனைவியின் நாய்.''

''ஏதாவது அடையாளம்?''

''ரொம்ப சைவ நாய். அப்பளம் எல்லாம் தின்னும். வாழைப்பழம் தின்னும். இப்படியொரு நாயை ஜென்மத் தில் பார்த்திருக்க மாட்டீர்கள்.''

இன்ஸ்பெக்டரும் ஷண்பகரும் போனதும் ப்ரமிளாவிடம் போய் அவ

ளருகில் தரையில் படுத்துக் கொண்டான். இரவு விளக்கின் வெளிச்சத்தில் அவள் கண்ணீர் உலர்ந்திருந்தது.

''ப்ரமிளா'' என்று அவளைக் கட்டிக் கொண்டான். கன்னத்தைத் தடவினான். அவள் பாதித் தூக்கத்தில் ''டோட்டு'' என்றாள்.

''காலைல கிடைச்சுடும்'' என்றான். எந்த நம்பிக்கையின் பேரில் சொல்கிறோம் என்று யோசித்தான்.

''இன்ஸ்பெக்டர் சொன்னார்'' என்றான்.

''ஆமாம்,'கண்டுபிடிச்சுக் கொடுத்துர்றேன்'னு சொல்லியிருக்காரு.''

ப்ரமிளா அவன் மடியில் படுத்து, ''எனக்கு பயமா இருக்கு. இங்கே வேண்டாம். பம்பாய் போய்டலாம்'' என்றாள்.

''வேலை முடியணுமே!''

''நான் போறேன். நீ அப்புறம் வா. பூரான், கரப்பாம்பூச்சியெல்லாம் இருக்கு. டோட்டு சாப்பிடவே இல்லை.''

மறுபடி அழ ஆரம்பித்தாள்.

''காலைல நிறையச் சாப்பிடக் கொடுக்கலாம்.''

அவன் மடியில் அவளே ஒரு நாய்க் குட்டி போலத்தான் படுத்துக் கொண்டிருந்தாள். அவன் காலரைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஒரு கையால் அவன் கையைப் பத்திரப்படுத்தி, உஷ்ணமாக மூச்சு விட்டுத் தூங்கினாள் அவள்.

காலை எழுந்த போது, ப்ரமிளா பாத்ரூமில் குளிக்கும் சப்தம் கேட்டது.

''எப்ப எழுந்தே?'' என்றான்.

''வா, வா, எழுந்திரு. நானும் டோட்டுவைத் தேடப் போகணும். எழுந்திரு...''

அவன் எழுந்திருக்க...

''டோட்டு கிடைச்சா முனீஸ்வரனுக்கு வேண்டிக்கப் போறேன். ஆமாம். அவர் கிட்ட வேண்டிக்கிட்டா எல்லாம் நடக்குமாம், நீயும் வேண்டிக்க'' என்றாள்.

அவன் தலையைக் கலைத்துவிட்டு... ''தலை வார்றேனே. உன் தலை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.''

''பெண்டாட்டின்னா இப்படின்னா இருக்கணும். தலைவாரிவிட்டு, பூட்ஸ் பாலீஷ் போட் டு. உம் பேர் நளாயினியா?''

''ப்ரமிளா.''

''எங்கே முத்தா கொடு பார்க்கலாம்.''

''ஆளைப் பாரு'' என்று அவனைப் பொய்க் கோபத்துடன் மார்பில் குத்தினாள்.

இருவரும் குளித்துவிட்டுப் புறப்பட ஆயத்தமாக வாசல் கதவைத் திறந்த போது கீழே கதவருகில் டோட்டு கிடந்தது.

*(தொடரும்)*




● ராஜீவ் காந்தி மறைவின் காரணமாக அங்கு சரியான தலைவர் அல்லது தலைமை இல்லாததால், அதன் எதிரொலியாகக் கூட்டணி நீடிப்பதில் சிக்கல்கள் ஏற்பட்டன. இந்தச் சிக்கல்கள் இப்போது தீர்க்கப்பட்டு விட்டன.

- முதல்வர் ஜெயலலிதா.

● மத்திய அரசு தமிழக அரசின் மீது மாற்றாந்தாய் மனப்பான்மையுடன்தான் நடந்து கொள்கிறது. சொல்லப் போனால் தமிழக அரசு சில பிரச்னைகளில் புறக்கணிக்கப்பட்டு வருகிறது.

- முதல்வர் ஜெயலலிதா.

● நமது கலாசார பாரம்பரியத்தைச் சிதைப்பது போன்று திரைப்படங்கள் இருக்கக் கூடாது.

- ஆளுநர் பீஷ்ம நாராயண் சிங்.

● மின்மினிப் பூச்சிகளைப் போல், சூடில்லாத வெளிச்சம் தருபவர்களாக எம்.பி.க்கள் இருக்க வேண்டும்.

- குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன்.

● அரசு விவகாரங்களில் சோனியா காந்தி குறுக்கிடவில்லை. மாறாக, இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு அவருடைய பணி பயனுள்ளதாக இருக்கிறது.

- பிரதமர் நரசிம்மராவ்.



''என் கணவருக்கு எப்பவும் ஆபீஸ் ஞாபகம்தான்டி...''

''எப்படிச் சொல்றே?''

''பாரேன், லீவு போட்ட அன்னிக்குக் கூட வீட்டுல தூங்கறார்!''

- சீர்காழி. வி. ரேவதி.

# திவ்யா என்றொரு பெண்

''திவ்யான்னு ஒரு பொண்ணு மேடையில எல்லாம் பேசுமே... அது வீடு இதுதானே...?''

மகள் பேரைச் சொல்லி யார் இப்படி விசாரிப்பது என்ற கேள்வியுடன் கற்பகம் சட்டென்று வாசலுக்கு வந்தாள்.

யாரோ ஒரு பெரியவர் பக்கத்து வீட்டுக் காரரை விசாரித்துக் கொண்டிருந்தார்.

''இங்கே வாங்க... திவ்யா வீடு இது தான்!'' என்றதும் பெரியவர் திவ்யாவின் வீட்டிற்குள் நுழைந்தார்.

முன்னறையில் கிடந்த பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். மின்விசிறியைப் போட்டு, குடிப்பதற்குத் தண்ணீர் கொடுத்தாள் கற்பகம்.

''திவ்யா உங்க பொண்ணாம்மா?''

''ஆமா...''

''ரொம்பக் கொடுத்து வச்சவங்க நீங்க. திவ்யா மாதிரி ஆயிரத்திலே ஒரு பொண்ணு கூடத் தேற மாட்டா...''

இவர் யார், 'எதற்காக இப்படியெல்லாம் புகழ்கிறார் என்று தெரியாவிட்டாலும் கற்பகத்தின் மனம் மகிழ்ச்சியில் நிறைந்தது.

''நீங்க யாருன்னு தெரியலையே...!''

''நான் பக்கத்திலே குமரன் நகர்லே குடியிருக்கேன். மேல வீதியிலே 'இண்டர்நேஷனல் டிரேடிங் கார்ப்பரேஷன்' இருக்கு பாருங்க, அதோட மானேஜர் என் பையன் தான். பேரு சூர்யகுமார்.''

''அப்படியா...? திவ்யாவை உங்களுக்கு என்னமாத் தெரியும்?''

''என்னம்மா இப்படிக் கேட்டுட்டீங்க? இந்த ஊர்லே உங்க பெண்ணைத் தெரியாதவங்க யாராவது இருக்க முடியுமா என்ன...? சரசுவதி கடாட்சம்னு சொல்லுவாங்களே..., அது முழுசா உங்க பொண்ணுக்கு வாய்ச்சிருக்கு... ராத்திரி வாணி மகால்லே ஒரு கருத்தரங்கம். 'பெண்களாலும் முடியும்!'னு தலைப்பிலே பேசணும். மைக்குக்கிட்ட வந்ததும், 'இப்படி ஒரு தலைப்பை எனக்குக் கொடுத்த உங்களுக்கு வணக்கம் சொல்ல மனசு வரலே'ன்னாளே பார்க்கலாம்... கூட்டம் அப்படியே திகைச்சுப் போயிட்டுது...''

அவர் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

கற்பகம் பெருமை பொங்க, 'அப்புறம்?' என்பது போல் இவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ஒரு சில நிமிடம் கூட்டத்தை நாலாபுறமும் திரும்பிப் பார்த்தா. 'நான் ஏன் அப்படிச் சொன்னேன்னு உங்களுக்குப் புரியுதா?' என்பது மாதிரி. அப்புறம் சொன்னா: 'அதென்ன 'பெண்களாலும்... உம்' என்று தனியாக அழுத்திச் சொல்ல வேண்டும்? மனிதர்கள் என்பது ஆணும் பெண்ணும் சேர்ந்ததுதானே...? அப்புறம் ஏன் பெண்ணைத் தனியாகப் பிரித்து அவளால் முடியுமா என்று சந்தேகம் கேட்க வேண்டும்? பெண்கள் என்ன மனிதப் பிறவியில் சேர்த்தியில்லையா...? ஆண் மட்டும்தான் சாதிக்கப் பிறந்தவனா? இதுவரை எல்லாச் சாதனைகளுமே ஆண்களால் மட்டும்தான் நிகழ்த்தப் பட்டு வந்திருக்கின்றனவா? ராகுல சாங்கிருத்தியன் 'வால்காவிலிருந்து கங்கை வரையில்...' என்ன சொல்லியிருக்கிறார்...? பெண்தான் ஆண் உள்ளிட்ட அனைவரையும் காப்பாற்றும் வல்லமை பெற்றவளாக இருந்திருக்கிறாள் என்றுதானே! கலை, அரசியல், விஞ்ஞானம், தொண்டு என்று எல்லாத் திசையிலும் இந்த ஆண்களுக்கு நிகராகப் பெண்ணினமும் சாதனை நிகழ்த்தியதற்கு ஏராளமான ஆதாரங்கள் இருந்தும், சாதித்துக் கொண்டிருப்பதைக் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருந்தும் 'பெண்களாலும் முடியும்' என்று பெண்ணிடமும் வாக்கு மூலம் வேண்டிய அவசியம் என்ன?' இப்படி அவள் அடுக்கடுக்காகக் கேட்கத் தொடங்கியதும் அத்தனை பேரும் தங்களை மறந்து கைத்தட்டினதிலே அரங்கமே குலுங்கிப் போச்சு போங்க... மறக்காம திருஷ்டி சுத்திப் போடுங்கோ...!''

''சரியாப் போச்சுங்க... திருஷ்டி கிருஷ்டின்னாலே அவளுக்குப் பொல்லாக் கோபம் வரும். சாஸ்திரம் சம்பிரதாயம்னாலே அவளுக்குச் சுத்தமாப் பிடிக்காது...''

''அதுலேயும் ரொம்பத் தெளிவா இருக்கிறதாச் சொல்லுங்க... சில பேருங்க மேடையில் சீர்திருத்தம் பேசுவாங்க... வீட்லே அதுக்கு நேர்மாறா இருப்பாங்க...

**உத்தமசோழன்**

அப்படியில்லாம அசலாவே இருக்குற தால்ல சொல்றீங்க...!''

'' 'நம்ப எதை மனசார நிஜம்னு நம்பு றோமோ அதைத்தான் சொல்லணும். நாம எதைச் சொல்றோமோ அதன்படிதான் நடக்கணும்'னு சொல்லுவா.''

''அதுதான் மனுஷ லட்சணம்.''

சற்று நேரம் பொறுத்துச் சொன்னார்.

''அந்தப் பொண்ணை நேரடியாப் பார்த்து என்னோட சந்தோஷத்தைத் தெரி விச்சுட்டுப் போகணும்னுதான் வந்தேன். பரவாயில்லே... இன்னொரு நாளைக்கு வர்றேன். வந்தாச் சொல்லுங்கோ.''

''ஐயாவோட பேரு...?''

''எம் பேரு பலராமன்... ரிடையர்டு



மிலிட்டரி ஆபீஸர்னு சொல்லுங்க...!''

மறுபடியும் ஒரு நாள் பலராமன் வந்திருந்தார். அன்று திவ்யாவும் வீட்டில் இருந்தாள்.

சம்பிரதாயமான அறிமுகமும் உபசரிப்பும் முடிந்த பிறகு திடீரென்று ஏதோ நினைவு வந்தவர் போலக் கடகடவென்று சிரித்தார்.

''என்னங்க...?'' என்று புரியாமல் கேட்டாள் திவ்யா.

''இல்லே... அந்தப் பட்டிமன்றத்திலே உன்னோட எதிர்க்கட்சிக்காரர் ஏதோ மலிவான ஜோக் சொல்லி, ஒருநாள் தன்னோட வீட்டிலே பத்துப் பாத்திரம் தேய்க்கும்படி ஆகிவிட்டது என்று சொன்னதும்... 'ஏன்? தேய்த்தால் அதிலென்ன தப்புங்கிறேன்? தெரியாமத்தான் கேக்குறேன்... அந்தக் காலத்திலே ஆண்கள் வேலை செஞ்சு சம்பாதிக்கணும். பெண்கள் குழந்தைகளைப் பார்த்துக்கிட்டுச் சமைச்சுப் போடணும்ங்கிற மாதிரி ஒரு நடைமுறை இருந்திருக்கு. அப்போ அது சரியா இருந்திருக்கலாம். ஆனா இப்போ நிலைமை என்ன? ஆணுக்குச் சமமாப் பெண்ணும் வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கிறாள். ஆக ஆணோட வேலையைப் பெண் பங்கு போட்டுக்கிறப்ப, பெண்ணோட வேலையை ஆண் பங்கு போட்டுக்கிறதிலே என்ன தப்பு? ஆண் பாத்திரம் தேய்ச்சுத்தான் ஆகணும். அதுலே நீங்கள்லாம் சிரிக்கிறதுக்கு என்ன இருக்கு?'ன்னு கேட்டதும் அந்த மனுஷன் அப்படியே ஆடிப் போய்ட்டாரு. உடனே பதில் சொல்லத் தெரியாமத் திருதிருன்னு முழிச்சாரு பாரு, அதை நினைச்சா இப்பவும் சிரிப்பு வருது.''

அவளுக்கும் சிரிப்பு வந்தது.

ஒரு நாள் கற்பகவிநாயகர் கோவிலுக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள் கற்பகம். அதற்குச் சற்றுப் பின்னால் தன் அலுவலக நண்பனுடன் ஏதோ பேசிக் கொண்டு வந்தாள் திவ்யா.

யதேச்சையாகக் குறுக்கிட்டார் பலராமன்.

''என்னம்மா கோவிலுக்கா?''

''ஆமாங்க... திவ்யாகூட பின்னாலே வந்துக்கிட்டிருக்கா...''

பின்னால் திரும்பிப் பார்த்தவர் சிரித்தபடியே சொன்னார்.

''உங்க பொண்ணுக்கு முன்னாடி சினிமா ஸ்டாரெல்லாம் தோத்துப் போகணும் போங்க. திவ்யாவுக்கு ஏகப்பட்ட ரசிகருங்க. அவளோட சிரிப்பும், அழகும் புத்திசாலித்தனமும் யாரையும் காந்தம் மாதிரி கண்டி இழுத்துடும்... அது யாரு... அவளோட படிச்சவனா?''

''இல்லே... ஆபீஸ்லே கூட வேலை பார்க்கிறவரு...''

''சொல்ல மறந்துட்டேனே... ரெண்டு நாள் முன்னாடி ஒரு கவியரங்கம் நடந்துச்சே... அதோட தலைமைக் கவிஞர் பெண்களைப் பார்த்துச் சொன்னார். நான் சமீபத்திலே ஒரு ஹைகூ கவிதை படிச்சேன். வனஜான்னு ஒரு அம்மா எழுதியிருந்தாங்க. ரொம்ப அருமையா இருந்துச்சு.

''வீடு கட்ட ஆரம்பித்தாள்,
விரைவாய் வளர்ந்தது,
வங்கியில் வட்டி.'

''எப்படி? வீட்டின் மீதுள்ள ஆசையால் அரைகுறையாய்க் கையிலுள்ள காசை நம்பிக் கடன் வாங்கி வீடு கட்ட ஆரம்பித்தால், வீட்டிற்குப் 'பதில் கடன் வளரும் என்று எவ்வளவு வேதனையோட சமூகப் பொறுப்போட சொல்லியிருக்காங்க... அதே மாதிரி இங்கே இருக்கிற பெண்ணுங்க யாரும் ஒற்றை வரியில் ஒரு கவிதை சொல்லணும்... அதுவும் உடனே சொல்லணும்... அதுவும் அசத்தற மாதிரி இருக்கணும். யாராவது சொல்ல முடியுமா?'ன்னு விரல் உயர்த்திக் கேட்டாரு...''

''ஹ்ஊம்...'' என்றாள் கற்பகம்.

''உங்க பொண்ணுடக்குன்னு தேவதை மாதிரி மேடையேறி வந்தாள். மைக்கைப் பிடித்தாள்... 'நட... சலனமற்று... நட!' என்று சொல்லிவிட்டுக் கீழிறங்கத் தொடங்கியவளை, கவிஞர் 'நில்லும்மா! இதுக்கு என்ன அர்த்தம்?'ன்னு கேட்டாரு.''

''அட... என்ன சொன்னா...?''

''அழகாப் பதில் சொன்னா... 'வெளிச்சத்தை நோக்கி... வெற்றியை நோக்கி நட... ஆனால் ஜெயம் கிடைக்குமா, கிடைக்காதா, கஷ்டமாக இருக்குமா என்றெல்லாம் கவலைப்படாதே! நடந்து கொண்டேயிரு. உன்னை நிச்சயமாய் வெற்றி எதிர்கொண்டு



''மூத்த பையன் திருச்சியில் பிச்சை எடுத்து வசதியா வாழ்ந்துக்கிட்டிருக்கான். ரெண்டாவது பையன் கோயம்புத்தூர்ல பிச்சை எடுத்து சௌகரியமா இருக்கான். இந்த மூணாவது பயல்தான் என்னமோ படிச்சிட்டு மெட்ராஸ்ல ஒரு கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்து கஷ்டப்பட்டுக்கிட்டிருக்கான்!''

- ஆலத்தம்பாடி ராஜகோபால்.

அழைத்து முத்தமிடும்'னு சொன்னாள். சபையிலே ஒரே சந்தோஷ ஆரவாரம் தான்...!''

பெருமையும் மகிழ்ச்சியுமாய்ப் பேச்சற்றிருந்தாள் கற்பகம்.

''அன்னைக்கு எம் பையனும் வந்திருந்தான். 'அடேயப்பா இந்தப் பொண்ணு எவ்வளவு புத்திசாலியாயிருக்கு'ன்னு ஆச்சரியப்பட்டுப் போனான். அன்னியிலிருந்து அவனும் உங்க பொண்ணு புராணம் பாட ஆரம்பிச்சிட்டான்...''

சட்டென்று கற்பகத்திற்கு ஏதோ ஒன்று புரிவது போலிருந்தது.

''உங்க பையனுக்குக் கல்யாணம் ஆயிட்டுதுங்களா...?''

''இல்லையே... பொண்ணு பார்த்துக்கிட்டிருக்கோம்!''

'சரி, மனிதருக்கு நம்ப பொண்ணை ரொம்பப் புடிச்சுப் போயிடிச்சு. மருமகளாக்கிக்க ஆசைப்படறார். அதனாலதான் இப்படிச் சுத்தி வளைச்சுப் பேசறாரு. அந்தப் பையனும் பெரிய உத்தியோகத்திலிருக்கான். படிப்பிருக்கு... அழகிருக்கு... இப்படி வலிய வர்றப்போ நாம எதுக்குப் பேசாம இருக்கணும்?' கற்பகம் ஒரு முடிவுக்கு வந்தாள்.

''நாளைக்கு என் தம்பியை உங்க வீட்டுக்கு அனுப்பறேன். உங்களோட ஒரு முக்கியமான விஷயமாப் பேசணும். வீட்லேயே இருங்க!''

''தாராளமா வரட்டும்!''

அவர் போய்விட்டார்.

தனது தம்பியிடம் முழு விவரத்தையும் சொல்லி அனுப்பினாள் கற்பகம்.

''அவரோட பையனுக்குத் திவ்யாவைக் கொடுக்கச் சம்மதம்னு சொல்லி மற்ற விவரங்களைத் தெரிஞ்சுக்கிட்டு வந்துடு.''

போன தம்பியை எதிர்பார்த்து ஆவலுடன் உட்கார்ந்திருந்தாள் கற்பகம்.

தம்பி வந்தான். ஒரு தம்ளர் தண்ணீர் குடித்தான். முகத்தைத் துடைத்துக் கொண்டான் கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தான்.

''என்னடாது... ஒண்ணுமே சொல்லாம உம்முன்னு உட்கார்ந்திருக்கே...!''

''மனசைக் கொஞ்சம் திடப்படுத்திக்கோ!''

''ஏன்? வேண்டாம்னுட்டாங்களா?''

''அப்படிச் சொல்லிட்டாத்தான் பரவாயில்லையே!''

''அப்புறம்?''

''அவருக்கு அடக்க ஒடுக்கமாக் குடும்பம் நடத்தற பொண்ணுதான் மருமகளா வேணுமாம். திவ்யா மாதிரி பொண்ணுங்களை ரசிக்கத்தான் முடியுமாம். அவளை மாதிரி ஒரு பொண்ணை வச்சுக் குடும்பம் நடத்த முடியாதாம்!''

கற்பகம் இடிந்து போனாள்.



''உர விலை ஏறிப் போச்சு. வாஸ்தவம்தான். அதுக்கும் ஏற்கெனவே நீங்க பேசிய வரதட்சணையை விட இப்ப அதிகமாக் கேட்கிறதுக்கும் என்ன சம்பந்தம்?''

''கல்யாணம்ங்கறது ஆயிரங்காலத்துப் 'பயிர்' ஆச்சே!''

- ஞா. ஞானமுத்து.



தலைவர் : ''மக்களுக்கு நிரந்தரமா நன்மை பயக்கற மாதிரி ஒரு திட்டம் வெச்சிருக்கேன்.''

நிருபர் : ''அரசியலை விட்டே நிரந்தரமா விலகப் போறீங்களா சார்...?''

- சீர்காழி. வி. ரேவதி.



''ஒத்துக்காரருக்குப் பத்து லட்சம் ரூபாய் பரிசு விழுந்ததே! என்ன செய்யப் போறாராம்?''

''ஒரு ஒத்து நாதஸ்வரமாகிறது'' என்று படம் எடுக்கப் போறாராம்!''

- புளியரை கணேசன்.

# மூன்றாந்தர நூலிலும் முதல்தரமாய் நெய்கிறார்கள்!

"நூல் விலை ஏற்றத்துக்குப் பின் பிசினஸ் பாதிப்பு இருக்கிறது. ஏறத்தாழ ஐம்பது சதவீதம் விலை உயர்வு, அதை எதிர்த்துக் கடையடைப்பு, உண்ணாவிரதம், மந்திரியிடம் மகஜர் என்று எல்லா முயற்சிகளும் செய்தாகி விட்டது. பலன்தான் ஒன்றுமில்லை'' என்கிறார் கோபால்சாமி. இவர் பவானியிலுள்ள கந்தன் இண்டஸ்டிரியல்ஸ் என்னும் ஜமுக்காளத் தயாரிப்புக் கம்பெனியைச் சேர்ந்தவர்.

பல்லாண்டுகளாய் ஜமுக்காளத் தயாரிப்புக்குப் பெயர் பெற்றது பவானி. படுக்கை விரிப்புகளும் கல்யாண மண்டபங்களில் பயன்படுத்தப்படும் ஜமுக்காளங்களும் பரம்பரை பரம்பரையாக இங்கே தயாரிக்கப்பட்டு வருகின்றன.

பல கடைக்காரர்கள் சொந்தமாகத் தறிகளையும் ஆட்களையும் வைத்துக் கொண்டு, நூல் வாங்கி, ஜமுக்காளம் நெய்து கொள்ளுகிறார்கள். சொந்தத் தறி இல்லாத கடைக்காரர்கள், தறி வைத்திருக்கிற நெசவாளர்களிடம் நூலைக் கொடுத்து, நெய்து வாங்கிக் கொண்டு, ஜமுக்காளத்தின் தன்மைக்கேற்றபடி கூலியைக் கொடுத்து விடுகிறார்கள்.

ஆனாலும் இந்த ஜமுக்காள நெசவுகளில் மட்டும் மற்ற துணிகளில் வருவதைப் போல் புதுப் புது டிசைன்கள் ஏதும் அதிகமாக வருவதேயில்லை. அதற்கு என்ன காரணம்?

''அதிக கல்வியறிவு இல்லாத பரம்பரை பரம்பரையாகத் தொழில் செய்து வரும் நெசவாளர்களே இங்கு அதிகம். அதோடு பெரிய டெக்ஸ்டைல் டிசைனர்களைக் கொண்டு புதுப் புது டிசைன்கள் தயாரிப்பதற்கான பொருளாதார வசதியும் கிடையாது என்பதால், புதுப் புது டிசைன்கள் வரவில்லை. இருப்பினும் பார்டருக்கு என்று சில டிசைன்களும், உட்பகுதிக்கு என்று சில டிசைன்களும் இருக்கின்றன. கேட்கிறவர்களின் விருப்பத்திற்கேற்ப இருக்கிற டிசைன்களை இணைத்து நெய்து கொடுக்கிறோம்,'' என்கிறார் பல தலைமுறைகளாக இத்தொழிலில் ஈடுபட்டு வரும் குடும்பத்தைச் சேர்ந்தவரான சிவகுமார்.

தென்னிந்தியா முழுக்க, பவானி ஜமுக்காளம் பிரசித்தம் என்றாலும் வட இந்தியாவில் 'தறி' என்று அழைக்கப்படும் கொஞ்சம் வித்தியாசமான ஜமுக்காள வகைகள்தான் பிரபலம். இவற்றைத் தரையில் விரித்துப் படுக்கவோ, உட்காரவோ அல்லது படுக்கையில் விரிக்கவோ பயன்படுத்துவதில்லை. சதுர அடி துணியின் விலை பத்து ரூபாய் என்பதால் பெரும்பாலும் பணக்காரர்களின் பங்களாக்களில், ஆடம்பரத் தரை விரிப்புகளாகவே உபயோகிக்கப்படுகின்றன.

'தறி' வகைத் தரை விரிப்புகளுக்கு அயல்நாடுகளில் ஏக கிராக்கி. அமெரிக்கா, ஜப்பான், ஸ்வீடன் போன்ற பல ஐரோப்பிய நாடுகளுக்குத் 'தறி'கள் ஏற்றுமதியாகின்றன.

''மேலை நாட்டவர்களின் தேவையைப் புரிந்து கொண்டு இங்கேயும் 'தறி' தயாரிக்க ஆரம்பித்தோம். வேறு சில ஏற்றுமதி கம்பெனிகளுக்காக முன்பு 'தறி' தயாரித்துக் கொடுத்த நாங்கள், இப்போது நாங்களே நேரடியாக ஏற்றுமதி செய்கிறோம். இப்போது தரத்துக்கு முக்கியத்துவம் தரும் ஏற்றுமதி ஆர்டர்கள் பவானிக்குத்தான் வருகின்றன. அந்த அளவுக்கு நாங்கள் தரத்தில் கவனம் செலுத்துகிறோம். ஆனால், குறைந்த விலையில் அதிகத்



துணிகள் தான் வேண்டும் என்றால் ஆர்டர்கள் போவது பானிப்பட்டு, சோபுரி போன்ற வட இந்திய நகரங்களுக்குத்தான். காரணம், நாங்கள் எண்ணிக்கைக்காகத் தரத்தில் சமரசம் செய்து கொள்வதில்லை என்பது தான்'' என்கிறார் கோபால்சாமி.

''89 - 90 - ஆம் ஆண்டில் எண்பத்தைந்து கோடியாக இருந்த ஏற்றுமதி சென்ற ஆண்டு சுமார் 120 கோடியாய் உயர்ந்தது'' என்கிறார் அவர்.

''இத்தனைக்கும் நம் நாட்டில் விளைகிற நல்ல முதல்தர பருத்தி, ஏற்றுமதி செய்யப்பட்டு விடுகிறது. மீதியுள்ள பருத்தியிலிருந்து தயாரிக்கப்படும் நூலிலிருந்து கிடைக்கும் முதல்தர நூலும் ஏற்றுமதியாகி விடுகிறது. இவை போக எஞ்சியுள்ளவற்றிலிருந்து தயாரிக்கப்படும் பொருட்களில் தான் நாங்கள் தரத்துக்கு முக்கியத்துவம் தரவேண்டியுள்ளது'' என்கிறார் கோபால் சாமி.



பட்டு ஜமுக்காளம்

ஜமுக்காளங்களில் பட்டு ஜமுக்காளங்களும் இருக்கின்றன. பருத்தி நூலுடன், பட்டு நூலையும் சேர்த்துத் தயாரிக்கப்படும் பட்டு ஜமுக்காளங்களுக்குக் கலியாண சேனில் நல்ல வரவேற்பு. ஜமுக்காளங்களுக்கு ஆர்டர் கொடுப்பவர்கள் தங்கள் பெயரையும் ஜமுக்காளத்தில் நெய்து தரும்படி கேட்டால் நெய்து தருகிறார்கள். ஏற்கெனவே தயாரிக்கப்பட்ட ஜமுக்காளங்களில் பெயர் பொறிக்க வேண்டுமென்றால் கூட நூல் கொண்டு நிமிஷமாய்த் தைத்துக் கொடுத்து விடுகிறார்கள்.

என்ன செய்து என்ன? உயர்ரகப் பருத்தியாகவும் நூலாகவும் ஏற்றுமதி செய்வதைத் தவிர்த்து மேல்நாடுகளின் தேவைக்கு ஏற்ப அவற்றைத் துணிவகைகளாக நெய்து ஏற்றுமதி செய்வதற்கு அரசு தீவிர முயற்சி எடுத்தால்தான் நமது நெசவாள நண்பர்களின் வாழ்க்கைத்தரம் உயர முடியும்.

– எஸ். சந்திரமௌலி

வண்ணப்படங்கள் : யோகா

# சிவகாமியின் சபதம்



## பத்தாம் அத்தியாயம்
## வாக்கு யுத்தம்

மந்திரி மண்டலத்தாரின் ஒருமுகமான அபிப்பிராயத்தை முதன் மந்திரி சாரங்கதேவ பட்டர் கூறி முடித்ததும் மகேந்திர சக்கரவர்த்தி சபையோரை ஒருதடவை சுற்றி வளைத்துப் பார்த்தார். மாமல்லரும் பரஞ்சோதியும் இருந்த இடத்தை மட்டும் நோக்காமல் அவருடைய கண்ணோட்டத்தை முடித்து விட்டு, ''சபையோர்களே! உங்களுடைய அபிப்பிராயத்தை முன்கூட்டியே எதிர்பார்த்து...'' என்று ஆரம்பித்தார். சிங்காசனத்தில் நிலைத்து உட்கார முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த மாமல்லர் அப்போது துள்ளி எழுந்து, ''பல்லவேந்திரா! சாதுக்களும், சமாதானப் பிரியர்களும், இராஜ தந்திரிகளும், தீர்க்கதரிசிகளும் வீற்றிருக்கும் இந்த மகா சபையில் அடியேனும் ஒரு வார்த்தை சொல்லலாமா?'' என்று கேட்டார். அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் சீறலுடன் நெருப்பைக் கக்கிக் கொண்டு வரும் அக்னியாஸ்திரத்தைப் போல் அந்தச் சபையில் இருந்தவர்களின் செவியில் பாய்ந்தது.

மாமல்லருடைய அக்னியாஸ்திரங்களை, மகேந்திரர் வருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அடக்க முயன்றார்.

''மாமல்லா! இதென்ன இப்படிக் கேட்கிறாய்? பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்கு உரிமை பூண்ட குமார சக்கரவர்த்தியல்லவா நீ? சாம்ராஜ்யத்தின் மந்திராலோசனை சபையில் கலந்து கொள்ள உனக்கு இல்லாத பாத்தியதை வேறு யாருக்கு உண்டு? உன் மனத்தில் தோன்றுகிறது என்னவோ, அதைத் தாராளமாகச் சொல்! ஆனால், நான் உன்னுடைய தந்தையாகையாலும், இச் சபையில் உள்ளவர்களெல்லாம் வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த பெரியவர்களாதலாலும் எங்களையெல்லாம் அவமதித்துப் பேசும் உரிமையை நீ கோர மாட்டாயென்று கருதுகிறேன்...''

அப்போது சபையில் ஏற்பட்ட குறுநகைப்பின் ஒலி மாமல்லர் காதில் விழவும் அவர் தம் கண்களில் தீ எழுமாறு சபையைச் சுற்றிப் பார்த்து விட்டுத் தந்தையை இடைமறித்துக் கூறினார்.

''தந்தையே! த ங் க ளை யா வ து இங்குள்ள பெரியவர்களையாவது அவமதிக்கும் எண்ணம் எனக்குக் கொஞ்சங் கூட இல்லை. பல்லவ குலத்தையும் பல்லவ இராஜ்யத்தையும் உலகம் என்றென்றைக்கும் அவமதிக்காமல் இருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறேன். வாழையடி வாழையாக தொண்டைமான் இளந்திரையன் காலத்திலிருந்து வந்த வீர பல்லவ குலத்தின் பெருமையைக் குறித்துத் தாங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். பல்லவ குலத்தைச் சேர்ந்தவர்கள் யாராவது இதற்கு முன்னால் இவ்விதமெல்லாம் செய்ததுண்டா? போர்க்களத்தில் எதிரியின் படைகளுக்குப் புறங்காட்டிப் பின் வாங்கி வந்ததுண்டா? பகைவர்களின் படையெடுப்புக்குப் பயந்து, கோட்டைக்குள்ளே ஒளிந்து கொண்டதுண்டா? கடைசியாக இப்போது, பல்லவ நாட்டுக்குள் படையெடுத்து வரத் துணிந்த பாதகனுடன் சமாதானம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லுகிறீர்கள். பல்லவேந்திரா! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நாளைக்கு உலகிலெல்லாம் என்ன பேச்சு ஏற்படும்? 'வாதாபிச் சக்கரவர்த்தி படையெடுத்து வந்த போது பல்லவ சக்கரவர்த்தி பயந்து கோட்டைக்குள் புகுந்து கொண்டார்; கடைசியில் சரணாகதி அடைந்து சமாதானம் செய்து கொண்டார்' என்றுதானே உலகத்தார் சொல்லுவார்கள். புலிகேசி சமாதானத்தை வேண்டித் தூது அனுப்பினான் என்று ஒருவரும் சொல்ல மாட்டார்கள். பாண்டியனும் சோழனும் சேரனும் களப்பாளனும் பல்லவர்களைப் பார்த்து நகையாடுவார்கள். புள்ளலூரில் புறங்காட்டி ஓடிய கங்க

நாட்டான் மறுபடியும் துள்ளி எழுவான். உலகம் உள்ளவரைக்கும் பல்லவ குலத்துக்கு ஏற்பட்ட இந்தப் பழி மறையாது.''

இப்படி மாமல்லர் கேட்போரின் மான உணர்ச்சியைத் தூண்டும் வீரமுள்ள வார்த்தைகளைப் பேசிக் கொண்டு வந்த போது, சபையிலே கலகலப்பு ஏற்பட்டது. மாமல்லருடைய வார்த்தைகளில் உண்மை இருக்கிறது என்பதை ஆமோதித்து ஒருவரோடொருவர் கசமுசவென்று பேசிக் கொண்டார்கள்.

இந்த நிலைமையைத் தமது கூரிய கழுகுக் கண்களின் ஓரப் பார்வையினால் தெரிந்து கொண்ட மகேந்திர சக்கரவர்த்தி, மாமல்லருடைய பேச்சில் நடுவே குறுக்கிட்டார்.

''மகனே! உலகம் நீ நினைப்பது போல் அவ்வளவு பைத்தியக்கார உலகம் அல்ல. மனிதர்கள் எல்லாரும் அவ்வளவு முட்டாள்களும் அல்ல. அப்படியே இருந்த போதிலும், அதற்காக நானும் மூடத்தனமான காரியத்தைச் செய்ய முடியாது. அவசியமில்லாத போது யுத்தம் நடத்த முடியாது. இலட்சக்கணக்கான வீரர்களின் உயிரை வீண் வீம்புக்காகப் பலிகொடுக்க முடியாது. காரணமில்லாமல் நாட்டின் பிரஜைகளைச் சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாக்க முடியாது. மாமல்லா! இந்தப் பல்லவ சிம்மாசனத்தில் நான் ஏறிய பொழுது, இந்த மணிமகுடம் என் தலையில் சூட்டப்பட்ட அன்று, இச் செங்கோலை முதன் முதலாக என்னுடைய கரத்தில் ஏந்திய உடனே, 'இந்த நாட்டு மக்களின் உயிரையும் உடைமையையும் பாதுகாப்பேன்; அவர்களுக்குக் கஷ்டம் எதுவும் வராமல் தடுப்பேன் என்று நாடறியச் சபதம் செய்தேன். வெறும் வீம்புக்காகவோ, உலகத்தில் மூடர்கள் ஏதேனும் சொல்லுவார்களே என்பதற்காகவோ அந்தச் சபதத்தை நான் கைவிட முடியாது!'' என்று கம்பீரமான குரலில் தலை நிமிர்ந்து கூறினார்.

ஆனால், மாமல்லருடைய அம்பறாத் தூணியில் இன்னும் சில பாணங்கள் மிச்சமிருந்தன.

''தந்தையே! இந்தப் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பற்றித்தான் தாங்கள் கவலைப்படுகிறீர்கள் என்றால், அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். தெய்வாதீனமான காரணத்தினால் ஏழு மாதத்துக்கு முன்னால் ஒரு சிறு கிராமத்தில் நான் மூன்று தினங்கள் வசிக்க நேர்ந்தது. அப்போது அந்தக் கிராமத்து ஜனங்கள் பேசிக் கொண்டதை என் இரு செவிகளாலும் கேட்டேன். இந்தப் பல்லவ இராஜ்யத்தின் பிரஜைகள் சுத்த வீரர்கள் என்றும், மானத்துக்காக உயிரையும் உடைமைகளையும் திருணமாக மதிக்கிறவர்கள் என்றும் அறிந்தேன். புள்ளலூர்ச் சண்டையைப் பற்றியும், அதில் நாம் அடைந்த வெற்றியைக் குறித்தும், பல்லவ நாட்டு மக்கள் எப்பேர்ப்பட்ட குதூகலம் அடைந்தார்கள், தெரியுமா? நாம் வீர சைனியத்துடன் இந்தக் காஞ்சிக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போகிறோம் என்ற வதந்தியை அவர்களால் நம்ப முடியவில்லை. பல்லவேந்திரா! என் காதினால் கேட்ட வார்த்தையைச் சொல்லுகிறேன்; மண்டபப்பட்டுக் கிராமத்து ஜனங்கள் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா? 'மாமல்லனைப் போன்ற புத்திரனையும், பரஞ்சோதியைப் போன்ற தளபதியையும் படைத்த மகேந்திர சக்கரவர்த்தி புலிகேசிக்குப் பயந்து எதற்காகக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போகிறார்? ஒருநாளும் அப்படிச் செய்ய மாட்டார்' என்று பேசிக் கொண்டார்கள். புலிகேசி காஞ்சிக் கோட்டைக்கருகில் வந்ததும் பல்லவ சைனியம் வாதாபிச் சைனியத்துடன் வீரப் போர் புரியுமென்று நம் பிரஜைகள் எதிர்பார்த்தார்கள். அவர்களை நாம் அடியோடு ஏமாறும்படி செய்து விட்டோம். இப்போதாவது அவர்களுடைய நம்பிக்கையை மெய்ப்படுத்த எனக்குக் கட்டளையிடுங்கள். இந்தக் கோட்டைக்குள்ளே ஓர் இலட்சம் பல்லவ வீரர்கள் எப்போது போர் வருமென்று துடிதுடித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நகரின் மாபெருங் கொல்லர்கள் ஒன்றரை வருஷமாகச் செய்து குவித்திருக்கும் வாட்களும் வேல்களும், 'தாகம் தாகம்' என்று தவித்துக் கொண்டிருக்கின்றன. இதோ என் உயிர்த் தோழர் பரஞ்சோதியும் துடிதுடித்துக் கொண்டிருக்கிறார். தந்தையே! சைனியத்தை நடத்திக் கொண்டு போகக் கட்டளையிடுங்கள். வாதாபி சைனியத்தை நிர்மூலம் செய்ய இந்த க்ஷணமே ஆக்ஞை இடுங்கள்!''

மகேந்திர பல்லவர் உணர்ச்சி மிகுதியினால் பேச முடியாமல் தத்தளித்தார். தமது அருமைக் குமாரனுடைய வீராவேச மொழிகளைக் கேட்டு அவருடைய கல் நெஞ்சமும் கனிந்து விட்டதாக ஒரு கணம் தோன்றியது. எனினும், மறுகணமே அவர் பல்லைக் கடித்துக் கொண்டு முகத்தையும் கடுமையாக வைத்துக்கொண்டு சொன்னார்: ''குழந்தாய்! சுத்த வீரன் சொல்லக்கூடிய வார்த்தைகளை நீ பேசினாய்; அதைக் குறித்து எனக்குச் சந்தோஷந்தான். ஆனாலும், உன் யோசனையை நான் ஒப்புக் கொள்வதற்

இல்லை. பல்லவ நாட்டு வீரக் குடிமக்களின் அபிப்பிராயத்தைப் பற்றிச் சொன்னாய். அதைப் பற்றியும் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால், பிரஜைகளின் அபிப்பிராயம் எப்போதும் சரியான அபிப்பிராயமாயிராது. முன் யோசனையின்றி, உணர்ச்சி வேகத்தினால் பிரஜைகள் சொல்லும் பேச்சைக் கேட்டு அது காரணமாக இந்த நாட்டு மக்களுக்கும், அவர்களுடைய வருங்காலச் சந்ததிகளுக்கும் எல்லையற்ற கஷ்ட நஷ்டங்களை நான் உண்டாக்கப் போவதில்லை!''

இவ்விதம் மாமல்லரைப் பார்த்துச் சொன்னவர், சபையோரின் பக்கம் திரும்பி, ''சபையோர்களே! உங்களுடைய சம்மதத்தை எதிர்பார்த்து நான் வாதாபிச் சக்கரவர்த்திக்கு முன்னமேயே மறுமொழி அனுப்பிவிட்டேன். அவருடைய சமாதானத் தூதை ஏற்றுக் கொள்வதாகவும், அவரைக் காஞ்சிமா நகருக்குள் நமது விருந்தினராக வரவேற்க மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்வதாகவும் ஓலை எழுதி அனுப்பி விட்டேன். அவ்விதம் நான் கொடுத்து விட்ட வாக்கை இனி என்னால் மீற முடியாது!'' என்றார்.

மாமல்லர் அப்போது முன்னைவிட அதிகப் பரபரப்புடனே, ''அப்பா! இது என்ன? பல்லவ வம்சத்தின் கொடிய சத்ருவை நமது தலைநகரத்தில் வரவேற்பதா? புலிகேசிக்கு உபசாரமா? யுத்தத்தை நிறுத்திச் சமாதானம் செய்து கொள்வதோடாவது நிறுத்திக் கொள்ளுங்கள். வாதாபிப் படை இந்த நாட்டை விட்டு ஒழியும் வரையில் நாம் கோட்டைக்குள்ளேயே வேணுமானாலும் ஒளிந்து கொண்டிருப்போம். ஆனால், வஞ்சகப் புலிகேசியுடன் நமக்குச் சிநேகம் வேண்டாம். வைஜயந்திப் பட்டணத்துக்கு நெருப்பு வைத்த பெரும்



பாதகன் இந்தப் புண்ணிய நகரத்துக்குள்ளே காலடி வைக்க வேண்டாம்'' என்று அலறினார்.

''முடியாது, மாமல்லா! பல்லவ குலத்தினர் ஒரு தடவை கொடுத்த வாக்கை மீறுவது வழக்கமில்லை; புலிகேசியை நான் வரவேற்றேயாக வேண்டும்'' என்றார் மகேந்திரர்.

இதைக் கேட்ட மாமல்லர் இரண்டு அடி முன்னால் பாய்ந்து வந்தபோது சபையோர் ஒருகணம் திடுக்கிட்டுப் போய் விட்டார்கள். தந்தையைத் தாக்குவதற்கே அவர் பாய்கிறாரோ என்றுகூடச் சிலர் பயந்து போனார்கள். அவ்விதமான விபரீதம் ஒன்றும் நேரவில்லை. சக்கரவர்த்தியின் அருகில் வந்து கைகூப்பிக் கொண்டு, ''தந்தையே! வாதாபிச் சக்கரவர்த்தியைத் தாங்கள் வரவேற்றேயாக வேண்டுமானால், எனக்கு ஒரு வரம் கொடுங்கள். புலிகேசியும் நானும் ஏககாலத்தில் இந்த நகருக்குள்ளே இருக்க முடியாது. புலிகேசி உள்ளே வரும் போது நான் வெளியே போய் விடுவதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்றார் மாமல்லர்.

''நானும் அப்படித்தான் யோசித்து வைத்திருக்கிறேன். குமாரா! வாதாபிச் சக்கரவர்த்தி வரும்போது உன்னை வெளியே அனுப்பி விடுவதாகத்தான் உத்தேசித்திருக்



கிறேன். அதற்கு வேறோர் அவசியமும் ஏற்பட்டிருக்கிறது'' என்றார் சக்கரவர்த்தி.

இச்சமயத்தில் தளபதி பரஞ்சோதி ஓர் அடி முன்னால் வந்து, ''பிரபு! எனக்கும் குமாரச் சக்கரவர்த்தியுடன் வெளியேற அனுமதி தரவேண்டும்'' என்று கேட்க, மகேந்திரர் கூறினார்:

''ஆஹா! அப்படியே! இராமன் போகும் இடத்துக்கு லக்ஷ்மணனும் தொடர்ந்து போக வேண்டியது நியாயந்தானே! நீங்கள் இருவரும், நம் சைனியத்திலே சிறந்த முப்பதினாயிரம் வீரர்களைப் பொறுக்கிக் கொண்டு ஆயத்தமாகுங்கள். வடநாட்டுச் சளுக்க சைனியம் படையெடுத்த சமயம் பார்த்துக் கோழைத்தனமாகவும், திருட்டுத் தனமாகவும் பல்லவ இராஜ்யத்துக்குள் பிரவேசித்த தென்பாண்டிய நாட்டானுக்கு அவசியம் ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். சீக்கிரமாகவே புறப்பட ஆயத்தமாகுங்கள்!''

சக்கரவர்த்தியின் கடைசி மொழிகள் மாமல்லருடைய கோபத்தைத் தணித்து ஓரளவு உற்சாகத்தை அளித்ததோடு, மந்திரி மண்டலத்தாரை ஒரே ஆச்சரியக் கடலில் ஆழ்த்தி விட்டன.

## பதினோராம் அத்தியாயம்
# வரவேற்பு

அன்றிரவு வெகு நேரத்துக்குப் பிறகு அந்தப்புரத்தில் மகேந்திர பல்லவர் தம் பட்டமகிஷியைச் சந்தித்த போது, புவனமகாதேவி தனது மனக் கவலையைத் தெரிவித்தாள். ''பிரபு! இன்றைக்கு மந்திராலோசனை சபையில் தங்களுக்கும் மாமல்லனுக்கும் பெரிய வாக்கு வாதம் நடந்ததாமே! நாலு பேருக்கு முன்னால் தந்தையும் புதல்வரும் சண்டை போட்டுக் கொள்ளலாமா?'' என்று சக்கரவர்த்தினி கேட்டாள்.

''தேவி! யார் என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். எனக்கு இன்று இருக்கிற பெருமையையும் பூரிப்பையும் சொல்லி முடியாது. அர்ஜுனனும் அபிமன்யுவும், லக்ஷ்மணனும் இந்திரஜித்தும் பேசுவதற்குரிய வீர வார்த்தைகளை இன்று மாமல்லன் பேசினான். உள்ளுக்குள் எவ்வளவோ எனக்கு ஆனந்தமாயிருந்தது. ஆனாலும், என்னுடைய நோக்கத்தை நான் கைவிடுவதற்கு இல்லை. ஆகையால், என்னுடைய ஆனந்தத்தை வெளியே காட்டாமல் கடுமையாகவும், கண்டிப்பாகவும் பேச நேர்ந்தது'' என்றார் சக்கரவர்த்தி.

''உங்களுடைய நோக்கந்தான் என்ன? தாங்கள் செய்யப் போகும் காரியம் எனக்கும் பிடிக்கவில்லை. நம்முடைய கொடிய சத்துருவைக் காஞ்சி நகருக்குள் வரவேற்பது உசிதமான காரியமா?'' என்றாள் பல்லவச் சக்கரவர்த்தினி.

''தேவி! இது என்ன வார்த்தை? சத்துருவாக வந்தவரை மித்திரராக்கித் திருப்பியனுப்புவது பல்லவ வம்சத்துக்குப் பெருமை அல்லவா? என்னுடைய நோக்கம் என்னவென்று கேட்டாயே? சொல்கிறேன், கேள்: என்னுடைய வாழ்நாளில் உலகத்தில் மீண்டும் சத்திய யுகம் பிறப்பதைக் காண வேண்டும் என்பதே எனது நோக்கம். இந்தப் புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் மூன்று பெரிய சாம்ராஜ்யங்கள் இருக்கின்றன. நர்மதைக்கு வடக்கே ஹர்ஷவர்த்தனர்; நர்மதைக்கும் துங்கபத்ராவுக்கும் மத்தியில் புலிகேசி; துங்கபத்ரைக்குத் தெற்கே மகேந்திர பல்லவன். இந்த மூன்று பேரும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பட்சத்தில் இந்தப் புண்ணிய பூமி நரக பூமியாயிருக்கும். பஞ்சமும் பிணியும் ஜனங்களைப் பிடுங்கித் தின்னும். அப்படியில்லாமல் இந்த மூன்று பேரும் சிநேக தர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்களாயிருந்தால், இந்தப் பாரத பூமியே சொர்க்க பூமியாகிவிடும். தேசத்தில் வறுமை, பட்டினி, பஞ்சம் ஒன்றும் தலை காட்டாது. கல்வியும் கலைகளும் ஓங்கி வளரும். சகல ஜனங்களும் சௌக்கியமாக வாழ்வார்கள். தேவி! என் இளம் பிராயத்தில் நான் ஒரு பகற்கனவு காண்பது உண்டு. சளுக்கச் சக்கரவர்த்தியின் விருந்தினனாக நான் சென்று அஜந்தாவின் வர்ண சித்திர அதிசயங்களைக் கண்டு களிப்பதாகக் கனவு கண்டேன். அப்புறம் வடக்கே கன்யாகுப்ஜத்துக்குச் சென்று ஹர்ஷவர்த்தனர் மூன்று வருஷத்துக்கு ஒரு தடவை நடத்தும் ஆனந்தக் கலைவிழாவைப் பார்த்து மகிழ்வதாகக் கனவு கண்டேன். மாமல்லபுரத்தை ஒரு சொப்பனச் சிற்ப உலகமாகச் சிருஷ்டித்து அதைப் பார்ப்பதற்காக ஹர்ஷரையும் புலிகேசியையும் அழைப்பதாகக் கனவு கண்டேன். அதெல்லாம் இப்போது நிறைவேறுமெனத் தோன்றுகிறது. நாங்கள் மூவரும் சிநேகர்களாகிவிட்டால் அப்புறம் இந்த

நாட்டில் சமயச்சண்டை என்பது ஏது? யுத்தந் தான் ஏது?''

''பிரபு! அன்பு மதத்தையும் சிநேக தர்மத்தையும் பற்றிப் பேசும் தாங்கள் பாண்டியனைத் தண்டிப்பதற்கு மாமல் லனை எதற்காக ஏவுகிறீர்கள்?'' என்று சக்கரவர்த்தினி குறுக்கிட்டுக் கேட்டாள்.

''அது வேறு விஷயம். சிநேகம் என்பது சமநிலையில் உள்ளவர்களுக்கிடையேதான் ஏற்பட முடியும். அறிவாளிகளுக்குள்ளே தான் அன்பு வளர முடியும். அறிவற்ற மூடர்களையும் அதிகப்பிரசங்கிகளையும் தண்டோபாயத்தைக் கைக்கொண்டே சீர் திருத்தியாக வேண்டும்'' என்று கூறினார் மகேந்திர பல்லவர்.

**ம**றுநாள் முதல் காஞ்சி நகரம் ஒரு புதிய தோற்றத்தை மேற்கொண்டது. ஏதோ ஒரு பெரிய முக்கியமான திருவிழாவை எதிர்பார்ப்பது போல ஜனங்களிடையே அபரிமிதமான உற்சாகம் காணப்பட்டது. வீதிகளையும் வீடு வாசல்களையும் ஜனங்கள் சிங்காரிக்கத் தொடங்கினார்கள். கடை வீதிகள் பழையபடி சோபை பெற்று விளங்கின. கோயில்களில் உற்சவங்கள் ஆரம்பமாயின. சிற்ப மண்டபங்களில் பழையபடி சிற்பிகள் வேலை செய்யத் தொடங்கினார்கள். நாற்புறமும் மேள வாத்தியங்கள் முழங்கின. சமஸ்கிருதக் கடிகைகளில் முன்போல வேதகோஷங்கள் கேட்டன. தமிழ்க் கல்லூரிகளில் பாசுரங்கள் பாடப்பட்டன. நடன அரங்கங்களும் நாடக மேடைகளும் புத்துயிர் பெற்றன. தாளச் சத்தத்துடன் கலந்து பாதச் சதங்கையொலி யும் எழுந்தது.

ஜனங்களின் முக மலர்ச்சியோ சொல்ல வேண்டியதில்லை. எல்லாரும் ஒரே ஆனந்த மயமாய்க் காணப்பட்டார்கள். புருஷர் களும் ஸ்திரீகளும் முன்போல ஆடை ஆபர ணங்களால் தங்களை அலங்கரித்துக் கொள்ளத் தொடங்கினார்கள். பெண்களின் கூந்தலில் புஷ்பக் காடுகள் மலர்ந்து நாற் புறமும் சுகந்தத்தைப் பரப்பின.

மாமல்லர் எதிர்பார்த்ததுபோல் காஞ்சி நகர மக்கள் அதிருப்தியடைந்தவர்களாகத் தெரியவில்லை. யுத்தம் நின்று விட்டதில் பெரிதும் மகிழ்ச்சியடைந்தவர்களாகவே காணப்பட்டார்கள். அதைக் காட்டிலும், சளுக்கச் சக்கரவர்த்தி காஞ்சிக்கு விஜயம் செய்யப் போவதை நினைத்து நகரவாசிகள் அபரிமிதமான களிப்படைந்தவர்களாகத் தோன்றினார்கள்.

**பு**லிகேசியின் சமாதானத் தூதன் வந்த ஐந்தாவது நாள் பிற்பகலில், காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசல் எட்டு மாதத்

## அருள்வாக்கு

'ஜனங்கள் இப்படிப்பட்ட சரக்குதான் கேட்கிறார்கள்' என்று அவர்கள் தலையில் பழியைப் போட்டுவிட்டு, கன்னா பின்னாப் பாட்டுப் பாடுகிறார்கள்; புலன் வெறியைத் தூண்டிவிடுகிற ரீதியிலேயே எழுதுகிறார்கள்; ஸினிமா எடுக்கிறார்கள்; சித்திரம் போடு கிறார்கள். ஜனங்களும் அவர்கள் தலையில் பழியைத் திருப்பிப் போட்டு அவர்கள் இப்படிப்பட்ட சரக்குகளைத்தான் தருவதால் தாங்கள் அதைத்தான் எடுத்துக் கொள் ளும்படி இருக்கிறது என்கிறார்கள். இதிலே ஜனங்களைவிடக் கலைஞர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களாக இந்தக் கலை களை அப்யஸித்துக் கொண்டிருக்கிற வர்களுக்குத்தான் அதி கம் பொறுப்பிருக் கிறது. இப்போது கன் டதை எழுதியும், பாடி யும், நடித்தும், படம் பிடித்தும் கீர்த்தி, தனம் எல்லாம் ஸம்பாதித்து விடலாம். ஆனால் 'இத்தனை ஜனங் களைக் கெடுத்தற் கான தோஷத்தையும் கண்ணுக்குத் தெரியா மல் ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறோம்; நாளைக்கு இதற்காக நாம் ஒருத்தனுக்குப் பதில் சொல்லியாக வேண்டும்' என்ற நினைப்பு அவர்களுக்கு இருக்க வேண்டும். மளிகை சாமானில் கலப் படம் பண்ணினால் குற்றம்; குடிதண்ணீரைக் கெடுத்தால் குற்றம் என்றால் நேரே மனுஷ்யனின் ஆத்மாவையே கெடுப்பது இவற்றைவிடக் குற்றம்தானே? கலப்படத்துக் காகத் தண்டிக்கிறவன் நம் மாதிரி ஒருத்தன்தான். அவனிடமிருந்து தப்பியும் விடலாம். அல்லது லஞ்சம் கொடுத்து ஸரிப்படுத்திவிடலாம். ஆனால் தன் ஆத்மா வையும் கெடுத்துக் கொண்டு, மற்ற வர்களையும் கெடுத்ததற்காக ஒருத்தனைச் சிக்ஷிக்கிறானே, அவனிடமிருந்து தப்பவே முடியாது; அவனை நாம் வசியம் பண்ணிக் கொள்ளவும் முடியாது; இந்த நினைப்பு இருந்து விட்டால் கலைகளில் ஈடு பட்டவர்கள் தப்பு வழிக்குப் போக மாட்டார்கள்.



**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சாரிய சுவாமிகள்.**

திற்குப் பிறகு மீண்டும் திறந்தது. பேரிகைகளும், நகராக்களும் சமுத்திர கோஷம், கடுமுகம் என்னும் வாத்தியங்களும் நெடுந்தூரத்திற்கு நெடுந்தூரம் உள்ளவர்களின் காது செவிடுபடும்படி முழங்கின. வாதாபிச் சக்கரவர்த்தி தாம் இளம் பிராயத்திலிருந்து பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருந்த 'கல்வியிற் பெரிய காஞ்சி' மாநகரத்திற்குள் பிரவேசம் செய்தார். அவருடைய முக்கிய பரிவாரத்தைச் சார்ந்த ஐம்பது பேர் அவருடனே வந்தார்கள்.

வெளிவாசலைத் தாண்டி உள்ளே பிரவேசித்ததும், அங்கே தம்மை வரவேற்பதற்கு ஆயத்தமாகக் காத்துக் கொண்டிருந்த மகேந்திர பல்லவச் சக்கரவர்த்தியைப் புலிகேசி பார்த்தார். அவ்விரண்டு பேரரசர்களின் கண்களும் சந்தித்தன. மகேந்திரரின் முகத்தில் அரும்பியிருந்த இளம் புன்னகையைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியும் வெளியாகவில்லை. ஆனால், புலிகேசியின் முகமானது அவருடைய கொதிப்படைந்த உள்ளத்தின் கொந்தளிப்பை நன்கு காட்டுவதாய் இருந்தது. 'என்னுடைய வம்ச சத்துரு, நான் போட்டுக் கொண்டு வந்த திட்டங்களையெல்லாம் தோல்வியடையச் செய்த மகேந்திர பல்லவன் இவன்தானா?' என்று புலிகேசியின் உள்ளத்தில் உண்டான ஆத்திரத்தை அவருடைய கண்கள் பிரதிபலித்தன.

இந்த எண்ணங்களோடு, 'ஆகா! கள்ளங் கபடு அறியாதது போலப் பாவனை செய்யும் இந்தக் கம்பீரமான முகத்தை இதற்கு முன் எங்கேயோ பார்த்தாற் போல் இருக்கிறதே!' என்ற நினைவும் புலிகேசியின் மனத்தில் தோன்றியது.

இரு சக்கரவர்த்திகளின் விருதுகளும் முறையே கூறப்பட்ட பிறகு, இருவரும் அவரவருடைய குதிரையிலிருந்து கீழே இறங்கி ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். அதே சமயத்தில் புலிகேசியின் கண்கள் மகேந்திர பல்லவருக்குப் பின்னால் நின்ற பரிவாரங்களைத் துருவி ஆராய்ந்தன. ''சத்தியாசிரயா! யாரைத் தேடுகிறீர்கள்?'' என்று மகேந்திர பல்லவர் கேட்க,

''பல்லவேந்திரா தங்களுடைய வீரப் புதல்வர் மாமல்லரைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன், அந்த மகாவீரர், இங்கு நிற்பவர்களிலே யாரோ?'' என்று சளுக்கச் சக்கரவர்த்தி கேட்டார்.

மகேந்திர பல்லவர் அப்போது இலேசாகச் சிரித்துவிட்டு, ''இல்லை, சத்தியாசிரயா! மாமல்லன் இங்கே இல்லை. அவன் வேறு முக்கிய காரியமாக வெளியூருக்குச் சென்றிருக்கிறான்!'' என்றார்.

(தொடரும்)

# கல்கி

## தீபாவளி மலர் - 1991



✱ வண்ணப்படம் : போசா

வண்ண
மயமாக
உருவாகி
வருகிறது...

# தில்லிக்குக் கேட்கிறமாதிரி ஒரு கூக்குரல்!

இடது கையை இடுப்பில் வைத்து, வலது கையால் விஷ்ணு சக்கரம் மாதிரி சாவிக்கொத்தைச் சுழற்றினாள் சுசிலா.

''குளிக்கப் போவதானால்



இப்போதே போக வேண்டும். தண்ணீர் சூடு ஆறிவிட்டால், மறுபடி சூடாக்க முடியாது'' என்றாள் அதிகாரமாக.

''முடியும். நீ ஒரு கையால் தண்ணீர் பக்கெட்டைத் தொட்டால் போதும்!'' என்று முணுமுணுத்தான் சாரங்கன்.

''என்ன முணுமுணுப்பு? போங்கள் சீக்கிரம்!''

குளித்துவிட்டு வந்தவனை, ''சாப்பிட உட்காரப் போகிறீர்களா, இல்லையா? எனக்கு வெளியே போகிற வேலை இருக்கிறது'' என்று சத்தம் போட்டாள் சுசிலா.

''இதோ, தலையை வாரிக் கொண்டு வந்துவிடுகிறேன் சுசி. பரட்டைத் தலையுடன் எப்படி ஆபீஸ் போகிறது?''

''ஆமாம். இருக்கிற தலைமுடியை எண்ணிவிடலாம். இதற்கு என்ன எண்ணெய், தலைவாரல் வேண்டியிருக்கிறது?''

பரட்டைத் தலையுடன் அப்படியே அலறியடித்துக் கொண்டு தட்டை வைத்துக் கொண்டான் சாரங்கன். ''உம். போடு!''

''எல்லாம்தான் டேபிளில் இருக்கிறதே? போட்டுக் கொள்ள வேண்டியது தானே? போடு என்ன போடு? - அதிகாரம் வேண்டியிருக்கிறது?''

சாதத்தின் மீது நெய், குழம்பு, அதன் தலையிலே வாழைக்காய் கறி என்று அவியலாகக் கவிழ்த்துக் கொண்டான் சாரங்கன். அள்ளி அள்ளிப் போட்டுக் கொண்டு, எழுந்து கையைக் கழுவிக் கொண்டான்.

''இந்த வெள்ளைச் சட்டையையே எத்தனை நாளைக்குப் போட்டுக் கொண்டு போவீர்கள்? பச்சையில் கோடு போட்ட சட்டை இருக்கிறதே, அதைப் போட்டுக் கொண்டு போங்கள் இன்றைக்கு!'' - ஆணை பிறந்தது சுசிலாவிடமிருந்து.

வந்த அழுகையில் சட்டையே போட்டுக் கொள்ளாமல், வெறும் பனியனோடு ஆபீஸ் போய்விடலாம் போல் இருந்தது சாரங்கனுக்கு.

சுசிலா சொன்னபடியே, பச்சையில் கோடு போட்ட சட்டையைப் போட்டுக் கொண்டு ஓடினான், ஆபீசின் வாசலுக்கே ஓடினான்.

மாலையில் வீட்டுக்கு வந்தபோது, சுசிலா கால் மேல் கால் போட்டுக் கொண்டு, டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தாள்.

''காப்பி, கீப்பி உண்டா?'' என்று மிக மெல்லக் கேட்டான் சாரங்கன். மெல்ல என்றால் ரகசியம் பேசுகிற குரலில்.

''சமையலறைக்குப் போகிற வழி தெரியுமில்லையா? போய், மேடை மீது வைத்திருக்கிற காப்பியை எடுத்துக் குடியுங்கள்!'' என்றாள் சுசிலா. டீ. வியை விட்டுக் கண்ணை எடுக்காமல்.

மறு பேச்சுப் பேசாமல் காப்பியைக் குடித்துவிட்டு நாற்காலியில் உட்காரப் போனவனை, சுசிலாவின் அதட்டல் தூக்கி வாரிப் போடச் செய்தது.

''அதற்குள் என்ன ரெஸ்ட்? தண்ணீத்துறை மார்க்கெட்டுக்குப் போய், கறிகாய் வாங்கிக் கொண்டு வாருங்கள்! நாளைக்குச் சமையலுக்கு ஒரு காய் கிடையாது!'' அடேயப்பா, அதிகாரமாவது அதிகாரம்.

என்ன ஆச்சு இன்றைக்கு? என்ன இப்படி விரட்டு விரட்டு என்று விரட்டுகிறாளே?

காலையிலிருந்து ஒய்ச்சல் ஒழிவு இல்லாததால் பார்க்க முடியாமல் போன நியூஸ் பேப்பரை, மார்க்கெட்டுக்குப் போய் வந்த பிறகு சுசிலா கண்ணில் படாத மாதிரி ஒதுங்கி உட்கார்ந்து, பிரித்தான் சாரங்கன்:

PM FOR GIVING MORE POWERS TO WOMEN என்று கொட்டை கொட்டையாய்த் தலைப்புப் போட்டு, செய்தி!

''இருக்கிற பவர் போதாதா மிஸ்டர் பிரைம் மினிஸ்டர்? உம் வீட்டில் ஸ்ரீமதி ராவ் இருந்திருந்தால் இப்படி ஒரு பேச்சுப் பேசியிருப்பீரா?'' என்று தில்லிக்குக் கேட்கிற மாதிரி கத்தினான் சாரங்கன்.

டீ. வி. இரைச்சலில் அது சுசிலாவின் காதுக்கு எட்டியிருக்காது.

- விசு

# ஆங்கிலப் பேராசான்

800 பக்கங்கள்
விலை ரூ.75-00
தபால் செலவு ரூ.10-00

இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்ற எண்ணமதைத் திண்ணமுறக் கொள்வீர்! தரணி போற்றும் ஆங்கிலத்தைத் தண்தமிழ் மூலம் கற்பீர்!

எத்தனையோ கல்வி நிலையங்கள், நூல்கள் பார்த்தாயிற்று! இனிமேல்தானா ஆங்கிலம் வரப் போகிறது என்னும் கவலையுறாதீர்! அந்த ஈனக் கவலையை ஓட விரட்டுங்கள்!

ஆங்கிலத்தைக் கற்றுவிடவேண்டும் என உறுதியாக இருங்கள்! உதவி செய்ய இதோ, பேராசிரியர் வந்து விட்டார், 'ஆங்கிலப் பேராசான்' என்னும் நூல் வடிவில்! தேர்ந்த ஒரு பேராசிரியரே உங்கள் முன் நின்று கரும்பலகையில் எழுதிக்காட்டி ஒவ்வொரு சொல்லையும் வாக்கியத்தையும் விளக்குவது போல் அமைந்த நூல் இது!

'தமிழ் மூலம் ஆங்கிலம் கற்க ஒன்பது நூல்கள்' என்னும் எமது வெளியீடுகளில் முதல் ஏழு நூல் களைத் தொகுத்து ஒரே நூலாக பைண்ட் செய்துள்ளோம். தொடர்புக்காகப் பெயரைச் சிறிது மாற்றி யுள்ளோம். இதனுள் அடங்கிய ஏழு நூல்கள் வருமாறு:

1. Basic English Grammar; 2. Advanced English Grammar (*பிழையில்லாமல் நல்ல ஆங்கிலம் எழுதுவது எப்படி?*); 3. Important Sentence Structure Part I; 4. Important Sentence Structure Part II; 5. Idioms and Phrases (*மரபுச் சொற்களும் தொடர்களும்*); 6. ஆங்கிலத்தில் கடிதம் எழுதுவது எப்படி?; 7. ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?

இந்த ஏழு அடங்கிய ஒன்றால் வெற்றி பெற முடியவில்லையென்றால், வேறெதனால் வெற்றி பெற முடியும்? எனவே முயலுங்கள்! உங்கள் முயற்சி சரியான முயற்சியாக இருக்கவேண்டும். தவறான முயற்சி அயர்ச்சி தரும்; தளர்ச்சி தரும்; இறுதியில் குழப்பம் மிகும்!

## ✓ சரியான முயற்சி என்றால் என்ன?

○ 1 அடிப்படை இலக்கணக் கூறுபாடுகளை (Basic English Grammar) முதலில் பொதுவாக அறிதல் வேண்டும். ○ 2 பின் அவ்விலக்கணப் பகுதிகளைச் சிறப்பாக (Advanced English Grammar) தெரிந்து கொள்ளவேண்டும். ○ 3 பொதுவாகவும் சிறப்பாகவும் இலக்கணக் கூறுபாடுகளை அறிந்து கொண்ட பிறகு Verb என்னும் வினைச்சொல்லைச் சிறிதும் ஐயத்திற்கு இடமின்றிக் கற்றுத் தெளி தல்வேண்டும். Verb என்று சொன்னாலே வீறு கொண்டு எழவேண்டும்; ஒரு சக்தி பிறக்கவேண்டும் மூச்சினில்! வாக்கிய அமைப்பின் (Important Sentence Structure Part I) ஜீவ நாடியான இது, ஆங்கில மொழிக்கே உயிர் போன்றதாகும். ○ 4 சொற்களின் கூட்டம் என்பது கொட்டி வைத்த கற்கள் போன்றது; வாக்கியம் என்பது கட்டி வைத்த கட்டடம் போன்றது. சொற்களை மேலும் மேலும் சேர்த்து எப்படி வாக்கியங்களைப் பல்வேறு வடிவில் அமைப்பது என்பதனை (Important Sentence Structure Part II) தங்குதடையின்றி உணர்தல்வேண்டும். ○ 5 சில சொற்களுக்கு Dictionary-ஐப் பார்த்து நேராகப் பொருள் கொள்ள முடியாது. மரபுச் சொற்களும் தொடர்களும் (Idioms and Phrases) என்னும் அவற்றை மரபு வழியில் நின்று பொருள்கொள்ளவேண்டும். ○ 6 கடிதம் எழுதுவது (Letter Writing) ஒரு கலை. அதனைக் காவிய நயம்பட அறிதல் நன்று! ○ 7 இப்படி இலக்கணப் பகுதிகளையெல்லாம் அறிந்து உணர்ந்து தெளிந்தபின் 'ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?' என ஏன் அஞ்சவேண்டும்?

இவ்வளவும் முறையாக அமைதல்தான் சரியான பயிற்சியாகும். இது வாய்த்தபின் ஒரு குறையும் உண்டோ? நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவீர்கள்! ஆங்கிலத்தில் எழுதுவீர்கள்! இது மட்டுமா? பிறர் எழுதுவதில், பேசுவதில் உள்ள இலக்கணப் பிழைகளையும் உங்களால் சுட்டிக்காட்ட முடியும்!

**இந்த ஒப்பற்ற 'ஆங்கிலப் பேராசா'னின் விலை மிகக் குறைவுதான்! ரூ. 75.00 தபால் செலவு ரூ. 10 சேர்த்து ரூ. 85.00 M.O. (அ) D.D. அனுப்புக. பதிவு அஞ்சலில் உடனே அனுப்புகிறோம்.**

பணம் அனுப்பவேண்டிய முகவரி:

**Varthamanan Pathippagam**

ARR Complex
141, Usman Road, T. Nagar, Madras-17.
(பனகல் பார்க் அருகில்)

# வாஷிங்டன் வைரம்

1



**வா**ஷிங்டன், டி. சி.

மே மாத மூன்றாம் வாரம். பிற்பகல் இரண்டு மணி. அன்று 'ஸ்மித்ஸோனியன்' மியூசியங்களில் அவ்வளவாகக் கூட்ட மில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அமெரிக்காவில் பள்ளிக்கூடங்கள் ஜூன் இரண்டாம் வாரம் வரை நடந்து கொண் டிருப்பது ஒரு முக்கிய காரணம். அதன் பிறகு வாஷிங்டனில் கூட்டம் வழிய ஆரம்பித்து விடும். குடும்பம் குடும்பமாகக் கூட்டம் வரும். வாஷிங்டனில் பார்க்க நிறைய இடங்கள் இருக்கின்றன. எந்த இடத்திலும் கூட்டமாகத்தான் இருக்கும். ஜூன் மூன்றாம் வாரத்திலிருந்து ஆகஸ்டு கடைசி வாரம் வரை வாஷிங்டன் திருவிழாக் கோலம் போட்டுவிடும்.

'ஸ்மித்ஸோனியன் இன்ஸ்டிடியூஷ னி'ல் இருந்த பதினான்கு மியூசியங்களில் ஒன்றான 'நேஷனல் மியூசியம் ஆப் நேச்சுரல் ஹிஸ்டரி' என்ற கட்டடத்தின் இரண்டாவது மாடி. அன்று காவலுக்காக உலாவிக் கொண்டிருந்த 'ஜிம்' என்று அழைக்கப் பட்ட ஜேம்ஸ் பர்ட்டன் தன் கையிலிருந்த சிகரெட் துண்டை அவசரமாகத் தொட்டி யில் போட்டான். சுற்று முற்றும் ஒருமுறை பார்த்தான். தான் செய்ததை யாரும் பார்க்கவில்லை எனத் தெரிந்து கொண்டு பெருமூச்சு விட்டான். மியூசியத்துக்குள் யாரும் சிகரெட் பிடிக்கக் கூடாது என்பதை சொல்ல வேண்டிய ஜிம் தானே ஒன்றைப் பிடித்துவிட்டுப் போட்டதை அவன் பெரிதாக நினைக்கவில்லை.

'எவ்வளவு நேரம்தான் சிகரெட் இல்லாமலிருப்பது?' என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டான். இதுவரை எத்தனையோ முறை இதுபோல் செய்திருக்கிறான்.

பெரிதாக ஏதோ சாதித்து விட்டது போல் முகத்தில் புன்முறுவலுடன் 'எல வேட்டர்' பக்கம் திரும்பிய ஜிம் அங்கே கீழே வைக்கப்பட்டிருந்த ஒரு காகிதப் பையைப் பார்த்தான். சட்டென்று எலவேட் டரை நோக்கி விரைந்த ஓர் ஆளின் பின்புறம் ஜிம்முக்குத் தெரிந்தது.

''ஹே... யூ... ஜஸ்ட் எ மினிட்'' என்று கூவிக் கொண்டே ஜிம் அந்த ஆளை நோக்கி ஓடினான். அந்த ஆள் சில விநாடிகள் நின்று ஜிம்மைப் பார்த்தான்.

அந்த ஆள் சுமார் ஆறடி உயரம் இருந் தான். சுருண்ட கறுத்த முடி. அடர்த்தியான மீசை. கச்சிதமான ஜீன்ஸூம், சிவப்புக் கோடு போட்ட சட்டையும் போட்டிருந் தான். கால்களில் கறுப்புக் கோடுகள் போட்ட 'ரீபாக்' ஷூஸ். அவனைப் பார்ப் போருக்கு அவன் தோற்றத்தில் முதலில் கொஞ்சம் மதிப்பு ஏற்படும். பார்த்துக் கொண்டேயிருந்தால் மதிப்பு பயமாக மாற வும் அதிக நேரமாகாது. அவனை உற்றுப் பார்த்தால் அவன் வலது கண்ணுக்குக் கீழே நீண்ட வடு ஒன்று தெரியும். அந்த வடுதான் அவன் முகத்திற்குப் பயங்கரத்தைத் தந்தது என்பது ஜிம்முக்குப் புரியச் சில விநாடிகள் ஆயின.

**ஜி**ம் அருகில் வருவதற்குள் அந்த ஆள் எலவேட்டருக்குள் நுழைந்து, அதுவும் கீழ் நோக்கிப் போக ஆரம்பித்துவிட்டது. மாடிப்



படிகளில் விரைந்து போய், கீழே அவனைப் பிடிக்கலாமா என்று நினைத்த ஜிம், மனத்தை மாற்றிக் கொண்டான். தனக்குப் பிடித்த வசவுகளில் இரண்டை மனமாற உதிர்த்துவிட்டு அந்த ஆள் கீழே போட்டு விட்டுப் போன காகிதப் பையை எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டான்.

வருவோர் போவோர் 'மியூசியத்தி'ல் பொருள்களைத் தொடாமலிருக்க வேண்டி கவனமாகக் காவல் செய்வது மட்டு மில்லாமல், அவர்களில் சிலர் அலட்சிய மாகப் போட்டுவிடும் குப்பைகளையும் கவனிக்க வேண்டியது ஜிம் போன்றவர் களுக்கு அன்றாட வேலையாகிவிட்டது!

ஜிம் மாடியிலிருந்து கீழே ஒரு முறை பார்த்தான். குப்பையைப் போட்டுப் போன ஆள் வாசற் கதவைத் திறந்து வேகமாக வெளியேறினான். அவன் ஏன் இவ்வளவு அவசரமாக ஓடுகிறான் என்பதைப் பற்றி ஜிம் நினைக்காமலிருக்க முடியவில்லை. ஜிம் இந்த நிகழ்ச்சியைப் பற்றித் தலைமைக் காவல் அதிகாரியிடம் சொல்லலாமா வேண்டாமா என்று அலசிக் கொண்டே நடந்தான். இதுபோன்ற நிகழ்ச்சிகள் அசாதா ரணமானவை என்று பட்டால் தலைமை அதிகாரிக்குத் தெரிவிக்க வேண்டியது அவன் கடமை. ஆனால் இது அசாதாரணமானதா? அந்த ஆள் ஏன் அவசரமாக ஓடி மறைந்தான்? அந்தக் காகிதப் பையில் என்ன இருக்கும்? ஒரு வேளை... ஒரு வேளை... ஜிம்மின் எண்ணத்தை நிஜமாக்குவது போல்...

ஒரு பயங்கரமான வெடிச் சத்தம் கேட்டது!



ஜிம் தற்காப்புக்காகச் சட்டெனக் குப்புற விழுந்து தலையைக் கையால் மூடிக் கொண்டான். அவன் மேல் சில கண்ணாடித் துண்டுகளும், காரையும், பிளாஸ்டிக் துண்டுகளும் சரமாரியாக விழுந்தன.

வெடியில் ஏற்பட்ட புழுதி அடங்கியதும் ஜிம் தலையை மெல்லத் தூக்கிப் பார்த்தான். அவனை நோக்கிப் பலர் ஓடி வருவது தெரிந்தது. எழுந்துவிடலாம் என்று எத்தனித்த ஜிம்முக்கு இடது காலை நகர்த்த முடியவில்லை. கால் மேல் பெரிய கல் விழுந்து கிடப்பதை உணர்ந்தான். அதற்குள் சில காவலர்களும் மற்றும் சிலரும் அவனுக்கு உதவி செய்ய ஆரம்பித்தனர்.

அவனது இடது காலை விடுவித்து அவனுக்கு முதலுதவி செய்யத் தொடங்கு முன்னரே 'ஆம்புலன்ஸ்' வந்து விட்டது. அவனை வண்டியில் ஏற்றும் போது ஜிம்முக்கு நினைவு தவறிவிட்டது.

ஜிம் கண் விழித்தான். சுற்றிலும் பார்த்தான்.

அவன் அருகில் டாக்டர்கள் இரண்டு பேர். மறுபக்கம் நர்ஸுகள் இரண்டு பேர். 'ஸ்மித்ஸோனியன்' தலைமைக் காவல் அதிகாரியும், வாஷிங்டன், டிசி போலீஸ் அதிகாரி ஒருவரும் நின்றிருந்தனர். இவர்கள் தவிர கருநீல ஸூட் போட்டிருந்த ஒரு மனிதன் அங்கே இருப்பதையும் கவனித்த ஜிம் மீண்டும் கண்களை மூடிக் கொண்டான்.

''ஜிம்... ஜிம், கேன் யூ டெல் அஸ் வாட் ஹேப்பண்ட்?'' தலைமைக் காவல் அதிகாரி டேவிட் பாமரின் குரல் நன்றாகவே ஜிம்மின் காதில் விழுந்தது.

மீண்டும் கண்விழித்த ஜிம், அங்கு நின்ற டாக்டர்கள், நர்ஸுகள் தவிர மற்ற ஒவ்வோர் அதிகாரியும், ஸூட் போட்ட மனிதனும் கையில் பேப்பர் பேனாவுடன் தயாராக இருந்தனர்.

''ஐ ஸப்போஸ்... பட்...'' என்று சிறிது நிறுத்திவிட்டு ஜிம் நீல ஸூட் போட்ட மனிதனை ஏறிட்டுப் பார்த்தான்.

''ஓ... திஸ் இஸ் ஏஜண்ட் ராபர்ட் வார்னர்'' என்றார் தலைமைக் காவல் அதிகாரி.

ஜிம் தலையாட்டினான். வாஷிங்டன், டி.சி.யில் இது சகஜமான விஷயம். அதுவும் ஸ்மித்ஸோனியனில் குண்டு வெடித்தது என்றால் எஃப். பி. ஐ. தலையிடாமல் இருக்குமா என்ன? 'ஃபெடரல் பீரோ ஆப் இன்வெஸ்டிகேஷன்' ஏஜண்டுதான் ராபர்ட் வார்னர் என்பது புரிந்ததும் ஜிம் நன்றாகவே கண்களைத் திறந்து பார்த்தான்.

தான் இரண்டாம் மாடியில் இருந்த போது உயரமான, கறுப்பான ஆள் ஒருவன் சந்தேகத்துக்குரியவாறு நடந்து கொண்டது பற்றிச் சொல்லி முடித்தான் ஜிம். தான் சிகரெட் பிடித்தது பற்றிச் சொல்லவில்லை! வீணான புகையை இப்போது ஏன் கிளப்ப வேண்டும்?

'அந்த ஆளை மீண்டும் பார்த்தால் ஜிம் அடையாளம் காட்ட முடியுமா?' என்று

# பொன்விழா ஆண்டு | பொன்நகைப் பரிசுத் திட்டம் – 6

பயன்படுத்தத்தான் பழமொழிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் பலன் தந்ததா? எப்படி? எந்த சந்தர்ப்பத்தில்? ''பலன் தந்த பழமொழி'' என்று தலைப்புத் தந்து ஒரு தபால் கார்டில் எழுதுங்கள். அதிகபட்சம் ஒரு இன்லாண்ட். முதல்தரமான, ரசமான கடிதத்துக்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகைப் பரிசு. பிரசுரமாகும் இதர சம்பவங்களுக்கு ஆறுதல் பரிசு.

முடிவு தேதி : 14.10.91.

ஆசிரியர் கல்கி, சென்னை -32 என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுத வேண்டும்.




கல்கி



பாலு ஜுவல்லர்ஸ

கேட்டதற்கு அவன் உற்சாகமாகவே பதில் சொன்னான். அந்த ஆளின் வலது கண் கீழே இருந்த நீண்ட வடுவை ஜிம்மினால் மறக்க முடியுமா என்ன? ஆனால் அந்த அடையாளத்தை ஜிம் சொல்லாமல் மறைத்தான்.

அவர்கள் பேசி முடிந்ததும் விடை பெறும் நேரம் வந்தது. ஜிம்மின் இடது கால் விரைவிலேயே குணம் அடையும் என்று டாக்டர்கள் கூறியதாகத் தலைமைக் காவல் அதிகாரி சொன்னார். அதுவரை இடது காலைப் பற்றியே சிறிதும் கவனமில்லாமல் பேசிக் கொண்டிருந்த ஜிம், மெல்ல எழுந்து உட்கார முற்பட்டான்.

உட்கார்ந்து பார்த்தவனுக்குத் தனது இடது காலை நகர்த்த முடியாதபடி கட்டுப் போட்டிருப்பது தெரிந்தது. அவன் ஆஸ்பத்திரியிலேயே இன்னும் இரண்டு வாரங்கள் இருக்க வேண்டுமாம். பிறகு கட்டுப் பிரிக்க மூன்று மாதங்களாவது ஆகுமாம். இதைக் கேட்டவுடனேயே ஜிம்மின் முகம் சிவந்தது. கோபம் தலைக்கேறியது. கண்டபடி திட்டித் தீர்க்க வேண்டும் போல் இருந்தது. யாரைத் திட்டுவது?

அந்த முகவடுக்காரனையா? அவன் யார்? அவன் வைத்துவிட்டுப் போன காகிதப்பையிலா வெடிகுண்டு இருந்தது? எதற்காக வெடிகுண்டை வைத்தான் அந்தப் பாவி? கேள்விகள் அடுக்கடுக்காக ஜிம்மைத் துளைத்தன. ஏஜண்ட் ராபர்ட் வார்னரின் குரல் ஒலித்தது.

''அந்த ஆளைப் பற்றி ஏதாவது குறிப்பாகச் சொல்ல முடியுமா?'' என்ற கேள்விக்கு ஜிம் யோசனை செய்து பதில் சொன்னான்:

''அந்த ஆள் அமெரிக்கன் இல்லை. அநேகமாக இந்திய நாட்டிலிருந்து வந்தவனாக இருக்கலாம்.''

ஜிம் கொடுத்த இந்தத் தகவலையும் குறித்துக் கொண்டு அதிகாரிகள் புறப்பட்டனர்.

## 2

அதே தினம். மாலை நேரம். மணி ஏழடித்தும் வெளிச்சம் குறையவில்லை. வாஷிங்டன் நகரின் போட்டோமாக் பகுதியில் ஒரு வீட்டின் முன்னால் சுமார் இருபது கார்கள் நின்றன.

அடுத்ததாக வந்து நின்ற சிவப்பு நிற 'வோல்வோ' காரிலிருந்து இறங்கிய மனிதர், கார் கதவைச் சாத்திவிட்டு வீட்டை ஒரு நோட்டம் விட்டார்.

பிரம்மாண்டமான வீடு. மே மாதத்தில் பூத்துக் குலுங்கும் 'ட்டுலிப்,' 'அஸேலியா,' 'ரோடடெண்ட்ரைன்' ஆகிய விதவிதமான வண்ணப்பூக்கள் வீட்டின் வெளிப்புறத்தை அழகுபடுத்தின. ஒரே சீராக வெட்டப்பட்ட பச்சைப் பசேலென்ற புல். போட்டோமாக் பகுதியில் இதுபோன்ற வீடுகள் சுமார் ஐந்து லட்சம் டாலராவது விலைபெறும்.

வாசல் மணியை அடிக்கக் கையைத் தூக்கியவருக்குக் கதவைத் திறந்தது ஒரு கவர்ச்சியான இந்தியப் பெண்.

''வாங்க டாக்டர்!'' முல்லைச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டே அந்தப் பெண் வந்தவரை வரவேற்றாள். வந்தவர் டாக்டர் வைரமூர்த்தி. ஓர் அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்.

''ஹாய், நிர்மல்!'' என்று பதிலுக்குச் சிரித்துக் கொண்டே கூறி வீட்டிற்குள் நுழைந்தார் வைரமூர்த்தி. நிர்மலா, டாக்டர் வைரமூர்த்தியின் காரியதரிசி.

வைரமூர்த்தியும், நிர்மலாவும் வந்திருந்தது போட்டோமாக்கில் இருக்கும் நண்பர் சிவராமன் அளித்த 'பார்ட்டி'க்குத் தான். சிவராமன் அந்தப் பகுதியில் புகழ் பெற்ற சர்ஜன். அமெரிக்காவுக்கு வந்து இருபது ஆண்டுகளாவது இருக்கும். சென்னை மருத்துவக் கல்லூரியில் பட்டம் பெற்ற சில மாதங்களிலேயே திருமணமும் செய்து கொண்டு அமெரிக்காவுக்கு வந்தவர். வாஷிங்டன் பகுதியில் வசிக்கும் பெரும்புள்ளிகள் பலரை நன்றாகத் தெரிந்து வைத்திருப்பவர் சிவராமன்.

வாஷிங்டன் பகுதிக்குப் புதிதாக வேலைக்கு வந்துள்ள இன்ஜினீயர் பிரபுவையும் அவர் குடும்பத்தினரையும் மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டி சிவராமன் நண்பர்களை அழைத்திருந்தார்.

இன்ஜினீயர் பிரபு, தம் மனைவி - இரு பிள்ளைகளுடன் வந்ததும், சிவராமன் அவர்களை எல்லோருக்கும் அறிமுகப் படுத்தினார்.

''இவர்தான் டாக்டர் வைரமூர்த்தி. பல்கலைக் கழகத்தில் ஆசிய சரித்திர ஆராய்ச்சித் துறையில் ஆராய்ச்சியாளராகவும், பேராசிரியராகவும் இருக்கிறார்'' என்று சிவராமன் அறிமுகப்படுத்தினார்.

பிரபுவும் மற்றவர்களும் இந்திய அரசியல் நிலையை அலச ஆரம்பித்தார்கள். பல்லாயிரக்கணக்கான மைல் தொலைவில் இருந்தாலும், அமெரிக்கக் குடிமக்களாக மாறினாலும், இந்திய அரசியல் பற்றிப் பேசப்படாத இந்தியர் விருந்துகள் எதுவும் இல்லை. தாங்கள் அரசியல் பேசுவதால்

நீங்கள் எண்ணும்
இளமைத் தோற்றத்தைப்
பெற...



கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய் கொண்டு இப்பொழுது நீங்கள் எண்ணும் இளமைத் தோற்றத்தைப் பெறலாம். அதன் மேம்படுத்தப்பட்ட ஃபார்முலா உங்கள் கேசத்திற்கு இயற்கையான தோற்றத்தை அளித்து நீடிக்கச் செய்கிறது. மேலும் இதை உபயோகிப்பது எளிது.

# கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்
# இப்பொழுது உயர்தரமான தொழில்நுட்பத்துடன்




இப்பொழுது

கோத்ரெஜ் வழங்கும் உன்னதமான பவுடர் ஹேர் டைய்

யாருக்கு லாபம் என்பதே புரியாமலும், பேச்சோடு அரசியல் முடிந்து விடுவதாய் எண்ணிக் கொண்டும் அரசியல் பேசும் பலரில் தம்மை ஒருவராய்க் கருதாதவர் வைரமூர்த்தி.

எனவே வைரமூர்த்தி அங்கிருந்து நழுவினார். தம்மைப் போல் அரசியல் பேச்சில் பற்றில்லாத சிலர் இருப்பதைப் பார்த்துச் சிறிது திருப்தியுடன் அவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

''கொஞ்சம் அமைதியா இருங்க'' என்று யாரோ உரக்கக் கூவினது கேட்டு, அடுத்தடுத்து இருந்த அறைகளில் சட்டென்று அமைதி ஏற்பட்டது.

அதைத் தொடர்ந்து, டீ. வி. யில் செய்தி வாசிப்பவரின் குரல் தெளிவாகக் கேட்டது.

செய்தி சூடாகத்தான் இருந்தது. அன்று பிற்பகலில் வாஷிங்டன் டி. சி. யில் நேச்சுரல் ஹிஸ்டரி மியூசியத்தில் வெடிகுண்டு ஒன்று வெடித்ததாம். அதில் பெண் ஒருத்தி கண் பார்வை இழந்தாளாம். அங்கு வேலை செய்த காவலர் ஒருவர், ஜேம்ஸ் பர்ட்டன் என்பவர், இடது கால் ஒடிந்து ஆஸ்பத்திரியில் இருக்கிறாராம். மியூசியத்துக்குச் சேதம் கிட்டத்தட்ட மூன்று லட்சம் டாலர் என்று கருதப்படுகிறதாம். வெடிகுண்டு வைத்தது யார் என்று கண்டு பிடிப்பதில் மும்முரமாய் இருக்கிறார்களாம். வெடிகுண்டு வைத்தது ஓர் இந்தியனாக இருக்கலாம் என்று நம்பப்படுகிறதாம்.



''யாருப்பா அது சைக்கிள்லே படு ஸ்டைலாப் போறவன்?''
''அவருதான் எங்க ஆபீஸ்லே 'சைக்ளோஸ்டைல்' செய்யறவர்!''
- 'கவிட் ரவி'

இந்தச் செய்தியைக் கேட்டதும் ஒவ்வொருவரும் தங்களது சொந்த அபிப்பிராயங்களைச் சொல்ல ஆரம்பித்தனர். பலருக்கும் நம்ப முடியவில்லை.

உலகத்தின் எந்தப் பகுதியில் வெடிகுண்டுகள் எப்போது வெடிக்கும்; யார் உயிர் பறிக்கப்படும் என்றே தெரிவதில்லை என்று பேச ஆரம்பித்தார்கள்.

வைரமூர்த்தி இருந்த கும்பலில் ஒருவர் திடீரென்று ஒரு கேள்வியை உதிர்த்தார்.

''ஸ்மித்ஸோனியன் கட்டடத்தில் ஏன் வெடிகுண்டு வெடிக்கணும்? அது பொது மக்களுக்குச் சேவை செய்யற இடமாச்சே?''

வைரமூர்த்தி கேள்வி கேட்டவரின் முகத்தைப் பார்த்தார். ''நல்ல கேள்வி தான்... உண்மையிலேயே நல்ல கேள்வி... சரித்திர ஆராய்ச்சியிலே ஈடுபட்டவன் என்கிற முறையிலே நான் பதில் சொல்லலாமா?''

எல்லோரும் வைரமூர்த்தியையே பார்த்தனர்.

''ஸ்மித்ஸோனியன் அதிகாரிகள் மிகவும் கவனமாய் இருப்பதாய் எண்ணுகிறார்கள். அந்த மியூசியங்களிலுள்ள எந்தப் பொருளும் எப்ப வேணுமானாலும் மறைந்துவிடலாம் அல்லது திருடப்படலாம் என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். இந்த வெடிகுண்டு நிகழ்ச்சி மியூசியத்தின் பாதுகாப்பற்ற நிலைக்கு எடுத்துக்காட்டு.''

அவருடைய பதில் சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. சற்றுநேரம் மௌனம் நிலவியது.

நிர்மலாவும் டாக்டர் வைரமூர்த்தியின் பதிலைப் பற்றிச் சிந்தித்தாள். 'அவர் ஏன் அப்படிச் சொன்னார்? ஸ்மித்ஸோனியன் மியூசியங்கள் பாதுகாப்பற்ற நிலையிலிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அந்த நிலை பற்றி இவருக்கு எப்படித் தெரியும்? எதற்காகத் தெரியும்?' என்றெல்லாம் அவள் நினைக்கத் தொடங்கினாள்.

''டாக்டர் வைரமூர்த்தி... நீங்கள் ஏன்...?'' கேள்வியை முடிக்காமல் திரும்பிப் பார்த்த நிர்மலாவுக்கு வைரமூர்த்தி அருகிவில்லாதது அப்போதுதான் தெரிந்தது.

அவர் அடுத்த அறையில் ஒரு சோபாவில் உட்கார்ந்து பைப்பில் புகையிலையை அடைத்துக் கொண்டிருந்தார். இன்னும் சில விநாடிகளில் பைப்பிலிருந்து புகை வர ஆரம்பிக்கும். வைரமூர்த்தி இந்த உலகில் இல்லாமல் சரித்திர உலகில் உலாவ ஆரம்பித்து விடுவார். இதை அறிந்த நிர்மலா, அவரை நோக்கி விரைந்தாள்.

அவள் வருவதை வைரமூர்த்தி கவனிக்கவில்லை. அவர் முகத்தில் நிலவிய திருப்தியைக் காட்டும் புன்சிரிப்பின் மர்மம் என்னவாயிருக்கும் என்பது நிர்மலாவுக்குப் புரியவில்லை.

(தொடரும்)

# இப்பொழுது நீண்ட கால 'ஆக்ட் ஒன்லி' இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு உங்கள் இரண்டு சக்கர வண்டி



# இருக்கும் வரை

மோட்டார் வாகனச் சட்டத்தின் கீழ் நீங்கள் செலுத்தும் சட்டபூர்வமான இன்ஷ்யூரன்ஸ் தொகையை இரண்டு சக்கர வண்டிக்குரிய நீண்ட காலவரை "ஆக்ட் ஒன்லி" பாலிசியின் கீழ் ஒரு சமயத்தில் முழுமையாகச் செலுத்த அனுமதிக்கிறது. நீங்கள் இன்ஷ்யூரன்ஸைப் புதுப்பிக்காததால் சட்டத்தை மீறிய விளைவுகளுக்கு மற்றும் அதனால் மூன்றாம் நபர்களுக்கு பெரும் நஷ்டஈடு கொடுப்பதற்கு உள்ளாவதைப் பற்றியும் நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

**ஆக்ட் ஒன்லி ஏன்?** மூன்றாம் நபர்களுக்கு ஏற்படும் பொறுப்பிற்கு எதிராக ஒவ்வொரு 2 சக்கர வண்டியும் **"ஆக்ட் ஒன்லி"** யின் கீழ் கட்டாயமாக இன்ஷ்யூர் செய்யப்பட வேண்டும். ஆக்ட் ஒன்லி இன்ஷ்யூரன்ஸை புதுப்பிக்க மறந்தால், நீங்கள் ரூ 1000/- அபராதம் செலுத்த வேண்டி வரும் அல்லது 3 மாதம் வரை சிறை தண்டனை விதிக்கப்படும் அல்லது இரண்டுமே அனுபவிக்க நேரும்.

**மூன்றாம் நபர் பொறுப்பு:** நீங்கள் வண்டி ஓட்டிச் செல்லும் போது எதிர்பாராத வகையில் ஒருவர் மீது மோதிவிட்டால் அவருக்கு ஏற்பட்ட காயம், மரணத்தில் முடிந்தாலும், நீங்கள் அந்நபருக்கு ஏற்பட்ட காயம் அல்லது மரணத்திற்கு நஷ்டஈடு தரவேண்டிவரும். சில சமயங்களில் இத்தொகை மிகப் பெரியதாக இருக்கலாம். **ஆக்ட் ஒன்லி பாலிசி இந்தப் பொறுப்பிலிருந்து உங்களை விடுவிக்கிறது. ஆனால் இப்பாலிசி சட்டப்படி அமலில் இருந்தால் மட்டுமே.**

புதுப்பிக்கப்படாமல் இருந்தால், முழுமையான நஷ்ட விளைவுகளுக்கு நீங்கள் உள்ளாகலாம்.

**நீண்ட காலவரை எதற்கு?** பல மாநில அரசுகள் சாலை வரியை ஒரே முறை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்துள்ளன. உங்கள் பாதுகாப்பை மற்றும் வசதியை அதிகரிக்க, நீங்கள் ஆக்ட் ஒன்லி இன்ஷ்யூரன்ஸ் தொகையை ஒரே முறை செலுத்தி ஆண்டுதோறும் புதுப்பிக்கும் முயற்சியைத் தவிர்க்கலாம்.

**கூடுதல் நலன்கள்:** ஆண்டு தோறும் நீங்கள் செலுத்தும் கட்டுத்தொகையைக் கருதினால், மொத்தமாகச் செலுத்தப்படும் தொகைக்குத் தள்ளுபடி கிடைக்கிறது. மற்றும் வேறொருவர் பெயருக்கு மாற்றம் செய்யப்பட்டாலோ அல்லது முழுமையான இழப்பினாலோ வண்டியின் ரிஜிஸ்ட்ரேஷன் ரத்து செய்யப்பட்டால் பாலிசியை ரத்து செய்ய இயலும். உங்கள் ப்ரீமியத்திலிருந்து உரிய தொகை திருப்பி வழங்கப்படும்.

**உங்கள் மனதிலுள்ள சுமையை நீக்கி மகிழ்ச்சிக்கான வழியை நாடுங்கள்.**

***நீங்கள் ஒரு விபத்திற்கு உள்ளானால் மற்றும் வேறு ஒருவருக்கு காயம் ஏற்பட்டால் தயை கூர்ந்து * இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்திற்கு சம்பவத்தை பற்றி விவரமாகத் தெரிவிக்கவும் * இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்தின் ஒப்புதல் அளிக்காமல் மூன்றாம் நபருக்கு நஷ்டஈடு பற்றி உறுதி அளிக்க வேண்டாம் * காவல் துறையினர் வழக்குத் தொடர்ந்தால் [illegible] மற்றும் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்திற்குத் தெரியப்படுத்தவும் * விபத்து பற்றி உங்களுக்கு வரும் [illegible] இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்திற்கு [illegible]***




**விழிப்புடன் இருக்கவும்-சாலை விபத்துக்களை விலக்கவும்**



நீண்ட கால மன நிம்மதி ஆக்ட் ஒன்லி பாலிசி

General Insurance Corporation of India









CANCO 91-TAM

அகிலா அத்தை ஒரு சமஸ்தானத்து ராணி மாதிரி தோற்றம் அளிப்பவள்.

''அத்தையிடமிருந்து லெட்டர் வந்திருக்கு'' என்றாள் அம்மா.

''என்னவாம்?''

''மகேஷ் பிள்ளை ப்ரமோத்தின் இரண்டாவது ஆண்டு நிறைவை ஹோட்டலில் பார்ட்டி கொடுத்துக் கொண்டாடப் போகிறார்களாம். கூப்பிட்டிருக்கிறாள்...'' என்றாள் அம்மா.

அத்தையைப் பார்த்துக் கிட்டத்தட்ட ஆறு மாதமாவது இருக்கும். அதுவும் ஒரு நாள் விசிட். இந்த முறை ஒரு வாரமாவது அத்தை விட்டில் இருக்க வேண்டும் என்ற முன்னேற்பாட்டுடன் கிளம்பினேன். ப்ரமோத்துக்கு இரண்டு, மூன்று பொம்மைகள் வாங்கிக் கொண்டேன்.

''வா! வா!'' என்று வாய் கொள்ளாமல் அத்தை வரவேற்றாள். ஆறு மாதத்தில் அத்தைக்கு ஏழு வயது கூடிப் போனது போலிருந்தது. ஆனாலும் அத்தையின் கம்பீரம் குறையவில்லை.

இன்னும் மேன்மையான அழகுடன் இருந்தாள். இரண்டு வயதுக் குழந்தைக்கு உண்டான அத்தனை வால் தனமும் இருந்தது. எல்லோருக்கும் கலபமாகப் போக்குக் காட்டிவிட்டு மடமட என்று படிகளில் ஏறிவிடுவான். அத்தைதான் ஒவ்வொரு முறையும் படியில் ஏறி அவனை இறக்கிக் கொண்டு வருவாள்.

''ப்ரமோத்! சாப்பிடலாம் வா!'' - அத்தை ஒரு தட்டில் சாதம் பிசைந்து கொண்டு வந்தபடி ப்ரமோத்தை அழைத்தாள்.

ப்ரமோத் டீபாயில் அடுக்கி வைத்திருந்த பேப்பர், புத்தகங்கள் எல்லாவற்றையும் மும்முரமாக வாரி இறைத்துக் கொண்டிருந்தான்.

''வாடா கண்ணா'' என்றாள் அத்தை மறுபடியும்.

ப்ரமோத், ''வேண்ணா'' என்று பலமாகத் தலையை ஆட்டி மறுத்தான்.

அத்தை ஒரு வாய் சாதத்தை அவன் வாய்

# இளமை என்றொரு பருவம்

சத்தியப்பிரியன்

ப்ரமோத்தின் பிறந்த நாள் ஒரு மூன்று நட்சத்திர ஹோட்டலில் கொண்டாடப் பட்டது. முழு ஏற்பாடும் அத்தையுடையது என்பது புரிந்தது.

வீடு பிறந்த நாள் அமர்க்களங்களி லிருந்து விடுபட்டுச் சாதாரண நிலையை அடைய இரண்டு நாட்களானது.

அத்தைதான் முழுவதுமாய்ச் சமையலறையைக் கவனித்துக் கொண்டிருந்தாள். உத்தியோகத்துக்குப் பறக்கும் வரையில் சியாமளா, ப்ரமோத்தின் தேவைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

''அம்மா! இன்னிக்கும் அவன் ஃபாரக்ஸ் ஊட்டிச் சாப்பிடலேன்னா, பால் கரைச்சு பாட்டிலில் புகட்டிடுங்கோ. ரெண்டு நாளா ப்ரமோத் வேணுங்கற மட்டும் ஸ்வீட் சாப்டாச்சு. ஸோ, ப்ளீஸ் அவாய்ட் ஸ்வீட்ஸ். ட்ரை பண்ணி பருப்பு சாதம் கொடுங்கோ...'' சியாமளா சொல்லி விட்டு மகேஷ் பின்னால் மோட்டார் பைக்கில் கிளம்பினாள்.

ப்ரமோத் அவன் சூழல், அமைப்பு இவைகளுக்குண்டான ஆரோக்கியத்திற்கு

அருகில் கொண்டு செல்ல, அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டு வெளியில் ஓடினான். கூடவே அத்தையும் ஓடினாள். சில சமயம் இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு, சில சமயம் போர்டிகோ பக்கம் ஓடி ஓடி விளையாட்டுக் காட்டித் தட்டில் இருந்த எல்லா சாதத்தையும் ஊட்டி விட்டாள்.

''எப்படி இருக்கீங்க அத்தை?''

''தெரியலை? சந்தோஷமா இருக்கேன்.''

''ஒரு ஆயா மாதிரியா?''

''உனக்குப் பாட்டிக்கும், ஆயாவுக்கும் வித்தியாசம் தெரியலை.''

நான் சிரித்தேன்.

''பொதுவாக் கேக்கறேன். ஹவ் இஸ் யுவர் ஹெல்த்?''

''முதுகுவலி ஒண்ணு விடாம படுத்தறது.''

''மருந்து சாப்பிடறீங்களா?''

''டாக்டர் நாலஞ்சு மாத்திரை எழுதிக் கொடுத்தார். என்ன மாத்திரை சாப்பிட்டு என்ன? வலி வரும்போது பொறுக்க முடியலை. கேட்டா வயசாயிடுச்சுன்னு டாக்டர்

கலபமாச் சொல்லிட்டார். எலும்பு தேய்ஞ்சு போச்சாம். எலும்புகளுக்குக் கூட ரிடையர் மெண்ட் உண்டு போல. நான் கண்டுக்கற தில்லை.''

எனக்கு அத்தையைப் பார்க்கப் பாவ மாக இருந்தது.

இதற்கு நடுவில் ப்ரமோத் ஒரு மாதிரி சிணுங்க ஆரம்பிக்க அத்தை, ''அவனுக்குத் தூங்கற நேரம் வந்தாச்சு'' என்று உள்ளே



போய் பாட்டிலில் பால் கரைத்துக் கொண்டு வந்தாள்.

ப்ரமோத்தைத் தூக்கிக் கொண்டு பெட் ரூமுக்குப் போனாள். உள்ளே அவனுக்குப் புதிது புதிதாகக் கதைகள் சொல்லித் தூங்கப் பண்ணிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்தில் வெளியில் வந்து, ''சாப்பிட வர்றியா?'' என்றாள்.

டைனிங் டேபிளில் உட்கார்ந்து பரி மாறிக் கொண்டோம். அத்தையின் கை பாகம் இன்னும் மாறவில்லை.

''உங்களை விட்டா ரசம் வைக்க ஆளில்லை அத்தை.''

''தேங்க்யூ'' என்று சிரித்தாள்.

''முதுமை என்பது என்ன அத்தை?'' என்றேன்.

''ஏன் கேட்கிறாய்?''

''இல்லை. முதலில் சொல்லுங்க. முதுமைன்னா என்ன?''

''வயசுன்னு சொல்லலாம். உடல் தேய் மானம்னு சொல்லலாம்.''

''மனசு தொடர்பான விஷயமில் லையா?''

''மனசு என்றுமே மாறாதது. அதன் இளமையை உன்னால் அழிக்கவே முடி யாது. உடல் இயக்கத்தின் கடைசித் துடிப்பு

வரை அதன் அளவில் மனம் இளமையானது. முதுமை என்பது முழுக்க முழுக்க உடல் சார்ந்த விஷயம்.''

''சரி, முதுமைக்கு அதற்கு அளிக்கப்பட வேண்டிய சரியான மரியாதை கிடைக்கிறதா?''

''ரசம் இன்னும் கொஞ்சம் போட்டுக்கோ...'' என்று ரசம் இருந்த பாத்திரத்தை என் பக்கம் தள்ளினாள்.

''போதும்.''

''முதுமைக்கு மரியாதையா? இன்வாட் லென்ஸ்? ஏன் இப்படிக் கேட்கறே?''

''உங்க காலத்தில் நீங்க உழைச்சது, வேலை பார்த்தது, வீட்டைக் கவனிச்சுண்டது எல்லாம் போக முதுமையிலும் இதே மாதிரி இருக்கணுமா?''

''இயக்கமின்மைதான் முதுமைங்கறியா?''

''காம்ப்ரமைஸ் பண்ணிண்டா பேசறீங்க?''

''இல்லை. வீட்டைக் கவனிச்சிண்டேன்னு சொன்னியே. அது முழுக்கச் சரியில்லை. என் பேரனுக்கு ஓடி ஓடிச் சாதம் கொடுத்தது மாதிரி நான் வேலைக்குப் போன நாட்களில் கொடுத்ததே இல்லை. என் அம்மா கவனித்துக் கொண்டாள்.''

''அதனால இதுங்கறீங்களா?''

''இல்லை பிரபாகர். இது வேறு. நீ இதை ஒரு பக்கமே பார்க்கிறாய். என் தள்ளாமை, என் முதுமை இவைகளை என்னுடைய கவசமாகப் பயன்படுத்திக் கொண்டு சும்மா இருக்கச் சொல்கிறாய். இதை வேறு மாதிரி சிந்திப்போம்.''

''எப்படி?'' என்றேன்.

''நான் ஏன் வேலைக்குப் போனேன் தெரியுமா?''

''ஏன்?''

''சராசரியிலிருந்து கொஞ்சம் உயரமான வாழ்வு வாழ.''

''பணம்தான் வாழ்வு இல்லையா?''

''அதை எப்படி முழுமையாகப் புறக்கணிக்க முடியும்?''

''சரி.''

''என் வேலை என் அந்தஸ்தை மாற்றியது. என் கணவர், என் வீடு, என் சூழல் எல்லாமே ஆரோக்கியமானதாக மாறியது. என் பையன்களுக்கு நல்ல படிப்புக் கொடுக்க முடிந்தது. படிப்பு ஆரோக்கியமாக உத்தியோகம் ஆரோக்கியமானது. உத்தியோகம் ஆரோக்கியமானதாக, சூழல் அந்தஸ்து எல்லாமே ஆரோக்கியமானது. இது ஒரு நிலை. என் மாறுதலை நான் தேர்வு செய்து கொள்ள வேண்டிய நிலை. என்ன செய்யலாம்? பையனுக்கு வேலைக்குப் போகாத பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்திருந்தால் பொறுப்பை மருமகளிடம் விட்டு விட்டுக் காலை நீட்டிக் கொண்டிருக்கலாம்.''

''நீங்க விரும்பியிருந்தால் அதில் தப்பில்லையே...!''

''இல்லை!'' என்று சிரித்தாள் அத்தை. ''ஆனால் நான் அதை விரும்பவில்லை!''

''பெண்களைப் பற்றிய உன் மேலான எண்ணம் என்ன?'' அத்தை இப்பொழுது என்னிடம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள்.

''அனைத்திலும் சரிபாதியானவர்கள்.''

''பெண்கள் வேலைக்குப் போவது பற்றி?''

''அதே பதில்தான்.''

''வேலை என்று வரும்பொழுது பொருளாதார மேம்பாடு என்று வீட்டைப் பற்றி மட்டும் நம்மால் சிந்திக்க முடிகிறது. அது ஒரு வகையில் சரி. பெண்கள் வேலைக்குச் செல்வதால் வீடு பொருளாதார விடுதலை பெறுவது நிஜம். ஆனால் ஏதோ ஒரு வகையில் தேசிய வளர்ச்சி என்பதற்கும் அவர்கள் காரணமாகி விடுகிறார்கள். குமாஸ்தாக்களால், அதிகாரிகளால், ஆசிரியைகளால், விஞ்ஞானிகளால், சித்தாள்களால், கலைஞர்களால் நம் நாடு உருவாக்கப்பட வேண்டும்.''

''ஆமாம்.''

''என் மருமகளின் வயசு என்ன தெரியுமா? இருபத்து நாலு. எம். எஸ்ஸி கோல்ட் மெடலிஸ்ட். சர்க்கார் உத்தியோகம் கிடைச்சது. போகவான்னு என்னைக் கேட்டா. நான் ஒரு நிமிஷம் சலனப்பட்டு வேணாம் வீட்டோடு இரு. அவன் சம்பாத்தியமே போதும்னு சொல்லி இருக்கலாம். நான் சொல்லலை. எனக்கு என் முதுமை ஞாபகம் வரலை. சியாமளாவின் இளமை என்னும் பருவம் ஞாபகத்துக்கு வந்தது. இளமைக் கைகள் வலுவான கைகள் இல்லையா? குழந்தை, குடும்பம், அடுப்படின்னு அதை முடமாக்குவது தப்பில்லையா? நான் என் மருமகளின் இளமைத் தீபத்தை அணைக்கத் தயாராக இல்லை. மாமியார் என்னும் ஸ்தானத்தை ஏற்றுக் கொண்டு விட்டேன். வருத்தமில்லை.''

சொல்லி விட்டுப் பளிச்சென்று சிரித்தாள் அத்தை.

## கல்கி பொன் விழா நாவல் போட்டி

**எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.**

# ரீகல்

சொட்டு நீலம் வழங்கும் 1001 பரிசுகள்

## வெள்ளி விழா போட்டி

ரீகல் சொட்டு நீலம் தயாரிப்பாளர்கள் உங்கள் ஆதரவினால் இப்பொழுது வெள்ளி விழா காண்கிறார்கள். இந்நன்நிகழ்ச்சியையொட்டி உங்களுக்கு வருகிறது

ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி !

| | |
|---|---|
| முதல் பரிசு | : ஒரு 5 பவுன் தங்க நெக்லஸ் |
| இரண்டாவது பரிசு | : ஒரு கலர் டி.வி. |
| மூன்றாவது பரிசு | : ஒரு ப்ரிட்ஜ் |
| நான்காவது பரிசு | : ஒரு வாஷிங் மெஷின் |
| ஐந்தாவது பரிசு | : மூன்று வெட்கிரைண்டர்கள் |
| ஆறாவது பரிசு | : நான்கு மிக்ஸிகள் |
| ஏழாவது பரிசு | : 990 நபருக்கு தலா 10 கிராம் எடையுள்ள வெள்ளி காசுகள் |

### போட்டியின் விவரங்கள்

1. டி.வி.யில் வரும் 'சொட்டு நீலம் டோய்...' விளம்பரப்படத்தில் மிகச் சிறந்த நான்கு காட்சிகளை குறிப்பிடுக.
2. இரண்டாவதாக பின் வரும் வாக்கியத்தை மொத்தம் 25 வார்த்தைகளுக்கு மிகாமல் பூர்த்தி செய்யுங்கள்

'நான் ரீகல் சொட்டு நீலம் உபயோகிப்பது ஏனென்றால் .......'

இந்த இரண்டு கேள்விகளுக்கும் விடைகளை ஒரு போஸ்ட் கவரில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள். கவரில் ''ரீகல் சொட்டு நீலம் வெள்ளி விழா போட்டி'' என்று குறிப்பிட வேண்டும். மறக்காமல் உங்கள் விலாசத்தையும் எழுதுங்கள்.

### நிபந்தனைகள் :

எங்கள் நான்கு அளவுகளில் உள்ள ஏதேனும் ஒரு பாட்டிலில் உள்ள ஒரு ரீகல் சொட்டு நீலம் லேபிளை இணைத்து அனுப்பவும்
விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : 31-1-1992
நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.

விடைகள் அனுப்ப வேண்டிய முகவரி :

The Southern India
Trading Agencies (India)
P.B. No.133,
Coimbatore - 641 001
Marketers of Regaul Blue
and Liquid Ultramarine Blue




ரீகல்

ஆஹா! என்ன வெண்மையோ! என்ன வெண்மையோ!

'SRI RAGHAVENDR'

# பட்சி தோஷம்

ஜெயபாரதி

''பட்சிதோஷம் ஒங்களுக்கு. அதான் இன்னும் குழந்தை பாக்கியம் இல்லே!''

பனங்காட்டுச் சாமியார் சொன்னார்.

''பட்சி தோஷமா, எனக்கா? புரியலியே! கொஞ்சம் வெளக்கமாச் சொன்னாத் தேவலை!'' கேட்டான் கைலாசம்.

''பட்சின்னா என்ன?''

அவனையே திருப்பிக் கேட்டார் சாமியார்.

''பறவை!''

அவரே பதிலும் சொன்னார்.

''மயில், கருடன், கிளி... இப்படிச்சில பட்சிகள்.. தெய்வாம்சம் கொண்டவை. இந்த மாதிரி பட்சிகள்ளே ஏதோ ஒண்ணோட தோஷம்தான் ஒங்களுக்கு... அதான் புத்திர பாக்கியம் ஏற்படலே!''

''அப்படியா?''

நம்பிக்கையில்லாமல் ஆச்சர்யத்துடன் கேட்டான் கைலாசம்.

''ஆமாம், தெரிஞ்சோ தெரியாமலோ எப்பவோ இந்த பட்சிகள்ளே ஏதோ ஒண்ணுக்கு நீங்க தீங்கு செய்திருப்பீங்க... ஒங்களுக்கு அது இப்ப தெரியாம இருக்கலாம்...''

சாமியார் பேசப் பேச கைலாசத்துக்கு நம்பிக்கை பிறந்தது. அவர் கூறுவதை மௌனமாகக் கேட்க ஆரம்பித்தான். காரணம், கல்யாணமாகி நான்கு ஆண்டுகள் ஆகின்றன. மருத்துவரீதியாக அவனிடமும் அவன் மனைவி சுலோசனாவிடமும் எந்தக் குறையும் இல்லை. என்றாலும் ஏனோ அவர்களுக்கு இன்னும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை.

கடைசியில் போன வாரம்தான் டாக்டர் ரேணுகா 'தெய்வத்தை நம்புங்க...' என்று கூறி விட்டதால் பனங்காட்டுச் சாமியாரைத் தேடி வந்தான்.

இவர் ஜாதகம் பார்ப்பவரில்லை. வந்திருப்பவரின் கை ரேகையைக் கூடக் கவனிப்பதில்லை. முகத்தைப் பார்த்த மாத்திரத்தில் என்ன கஷ்டம் என்றும் அதற்கு என்ன பரிகாரம் என்று கூறி விடுவார்.

காசு வாங்கி 'கமர்ஷியல்' செய்யாத ஒருவரின் பேச்சைக் கைலாசத்தால் நம்பாமல் இருக்க முடியவில்லை.

''இந்த பட்சி தோஷத்துக்கு நான் என்ன செய்யணும்?''

மிகவும் பவ்யமாகக் கேட்டான்.

''எந்த பட்சி தோஷம்னு தெரிஞ்சாத்தான் பரிகாரம் சொல்ல முடியும். மயிலாயிருந்தா முருகனுக்குப் பால் காவடி எடுக்கறதா வேண்டிக்கலாம்; கருடனா இருந்தா திருக்கழுக்குன்றம் போய் அங்கேயே மூணு நாள் தங்கி கருடாழ்வாரைத் தரிசனம் பண்ணிக்கலாம்; கிளியா இருந்தா...''

பனங்காட்டுச் சாமியார் ஒவ்வொரு பட்சியின் பெயராகச் சொல்லி அதற்கான பரிகாரத்தைக் கூறிக் கொண்டிருக்கும்போதே கைலாசத்தின் உள் மனம் 'நான் அடிச்ச கல் அந்தக் கிளி மேல படலே.. கண்டிப்பா அது ஜெயதேவனுடைய கல் பட்டுத்தான் கீழே விழுந்து துடிச்சது...'' என்று எண்ண ஆரம்பித்தது.

அப்போது அவனுக்குப் பன்னிரண்டு வயதுக்கு மேல் இருந்திருக்க முடியாது. நல்ல கோடை வெயில். பள்ளிக்கூடம் கிடையாது. ஊரில் இருக்கிற நாலு தெருக்களையும் சுற்றிச் சுற்றி வந்தான் கைலாசம். கூடவே ஜெயதேவன். அவனுக்கும் கைலாசத்தின் வயதுதான். இருவரும் ஒரே வகுப்பில்தான் படித்துக் கொண்டிருந்தனர். நல்ல நண்பர்கள்.

''டேய், சவுக்குத் தோப்புக்குப் பக்கத்துல முருங்கை மரம் இருக்கே, அங்கே தினம் இந்த நேரத்துக்கு நெறைய பச்சைக் கிளிகள் வருதுடா... வரியா, நாம போய் ஒண்ணைப் புடிக்கலாம்!'' என்று கூப்பிட்டான் ஜெயதேவன்.

''முருங்கை மரத்துக்கு ஏண்டா பச்சைக் கிளிகள் வரப் போவுது? ஆமாம், கிளியை எப்படிடா புடிக்கறது?''

''முருங்கைப் பூவைத் திங்கறதுடா கிளிகள். நான் பாத்திருக்கேன். எங்கிட்டே ரெண்டு உண்டிகோல் இருக்கு. போய்க் கிளியை அடிக்கலாம் வா!''



இரண்டு பேரும் மறுநாள் ஆளுக்கொரு உண்டிகோலுடன் புறப்பட்டார்கள். இரண்டு பேரின் அரை நிஜார் பைக்குள்ளும் சின்ன சின்னதாகத் தெருவில் பொறுக்கிய கற்கள்.

ஏரிக்கரைக்குப் போனார்கள்.

கோடைக் காலமாக இருந்தாலும் சவுக்குத் தோப்புக்குள் 'உய்ங்' என்ற சப்தத்துடன் காற்று ஓடிக் கொண்டிருந்தது.

''டேய் கிளி கத்தறதுடா!''

சப்தம் வந்த திசையைப் பார்த்தபடி கூறினான் கைலாசம்.

இரண்டு பேரும் முருங்கை மரங்கள் அடர்ந்த இடத்துக்குப் போனார்கள்.

''டேய்... மெதுவாக..... சப்தம் போடாதே...அங்கேயே நில்லு!''

ஜெயதேவன் கூறியதும் கைலாசம் அந்த இடத்திலேயே நின்றான்.

நான்கு ஐந்து கிளிகள் மரக்கிளையில் அமர்ந்து, இளம் முருங்கைப் பூக்களைக் கொத்திக் கொத்தித் தின்று கொண்டிருந்தன. சில பூக்கள் தரையில் விழுந்தன.

ஜெயதேவன் மெதுவாகத் தன் நிஜார் பைக்குள் கை

விட்டு ஒரு சின்னக் கல்லை எடுத்து உண்டிகோலில் வைத்துக் கிளிகளை நோக்கி அடித்தான்.

''கீ, கீ'' என்ற கத்தலுடன் எல்லாக் கிளிகளும் சவுக்குத் தோப்பு இருந்த திசையில் பறந்து போயின.

''என்னடா எல்லாம் பறந்து போச்சு?''

''சும்மா இருடா. மொத அடியிலேயே படுமா? கொஞ்சம் வெயிட் பண்ணுவோம். மறுபடியும் வரும். இந்தத் தடவை ஒரே சமயத்துல நாம் ரெண்டு பேரும் சேர்ந்தாப் போல அடிப்போம்... கண்டிப்பா ஒரு கல் கிளி மேல பட்டே தீரும்... நீ வேணாப் பாரேன்!'' என்று ஜெயதேவன் கூறினான்.

இரண்டு பேரும் கல்லைப் பொருத்தி முருங்கை மரத்தையும் சவுக்குத் தோப்பையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று வேறு திசையிலிருந்து இரண்டு ஜோடி கிளிகள் 'கீ, கீ' என்று கத்திக் கொண்டே பறந்து வந்து கிளைக்கு ஒரு ஜோடியாக அமர்ந்து கொண்டன. சிறிது நேரம் பூக்களைத் தின்னாமல் வெறுமனே கத்திக் கொண்டு அங்கும் இங்கும் பார்த்தபடி இருந்தன. பிறகு ஒரு ஜோடி இளம் பூக்கள் இருந்த கிளைக்குத் தாவித் தின்ன ஆரம்பித்தன.

ஜெயதேவன் மெள்ளத் தலையைத் திருப்பி, கைலாசத்தைப் பார்த்துத் தலை அசைத்தான்.

இரண்டு பேரும் கைகளை உயர்த்தி ஒரே சமயத்தில் ரப்பரை இழுத்துக் கற்களைச் செலுத்தினார்கள்.

'கீ, கீ' என்ற அலறலுடன் ஒரு கிளி பொத்தென்று தரையில் விழுந்து துடிக்க ஆரம்பித்ததும் மற்றவை திசைக்கு ஒன்றாகப் பறந்து போயின.

''பாத்தியா, ஒரே சமயத்துல ரெண்டு பேரும் அடிச்சா கண்டிப்பா கல் படும்னு நான் சொல்லலே?''

ஜெயதேவன் கூறியதும் கைலாசத்துக்குக் கோபம் வந்தது.

''நான் அடிச்ச கல்லு பட்டுத்தான் கிளி கீழே விழுந்தது. அதனால எனக்குத்தான் இந்தக் கிளி!'' என்று கூறிக் கொண்டே கிளியுடன் வேகமாக நடக்க ஆரம்பித்தான் கைலாசம்.

''நீ வேணும்னா கிளியை எடுத்துக்க. ஆனா என் கல்லு பட்டுத்தான் கிளி கீழே விழுந்தது.''

''ஒத்துக்க மாட்டேன்... நான் அடிச்சுத்தான் கிளி கீழே விழுந்தது!''

கைலாசம் கிளியுடன் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தான்.

**'பட்சி தோஷம்'** என்று சாமியார் சொன்னதும் ஒரு வேளை என்றோ நடந்து போன இந்தச் சம்பவம் காரணமாக இருக்குமோ என்ற சந்தேகம் வந்தது கைலாசத்துக்கு.

ஆனால் -

அன்று அவர்கள் இரண்டு பேரும் ஒரே சமயத்தில்தான் கல்லை அடித்தார்கள். அவன் அடித்த கல் பட்டுத்தான் கிளி கீழே விழுந்தது என்று ஜெயதேவன் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தான். ஆனால் உண்மையிலேயே யாருடைய கல் பட்டு அந்தக் கிளி அத்தனை ஓலத்துடன் தரையில் விழுந்து துடித்தது? ஒருவேளை ஜெயதேவனின் கல் பட்டுத்தான் அது எலும்பு முறிவுடன் கீழே விழுந்ததோ என்னவோ?

'கண்டிப்பாக ஜெயதேவன் அடித்த கல்தான் கிளியை வீழ்த்தியது. தனக்கு எந்த பட்சி தோஷமும் கிடையாது' என்று சமாதானம் சொல்லிக் கொண்டான் கைலாசம்.

ஆயினும் உடனே அவன் மனம் முழுவதுமாகச் சமாதானம் அடையாமல் சற்று சஞ்சலப்பட்டது. ஜெயதேவனை சந்தித்துக் கேட்டால்தான் உண்மையில் 'யார் அடித்த கல் பட்டு கிளி அன்று விழுந்தது என்கிற உண்மை புரியும்' என்று நினைத்தான் கைலாசம்.

ஜெயதேவன் இன்று எங்கேயிருக்கிறான்? அவனைப் பார்த்துக் கிட்டத்தட்ட பதினேழு வருடங்களாவது ஆகியிருக்கும்!

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு தங்கள் இரண்டு பேருக்கும் பொதுவான நண்பன் முகுந்தனைச் சந்தித்த போது ஜெயதேவன் திருவான்மியூரில் வசிப்பதாகக் கூறியிருந்தான்.

**ப**ஸ் ஏறி திருவான்மியூர் போனான் கைலாசம். வீட்டை அடைந்து அவன் பெயரை இரண்டு தரம் உரக்கச் சொன்னான். பழைய நண்பனைப் பல வருடங்களுக்குப் பிறகு பார்க்கப் போகிறோம் என்ற உணர்வு ஏனோ அவனிடம் சற்றும் ஏற்படவில்லை!

''யாரு, என்ன வேணும்?''

ஜெயதேவனின் மனைவி வந்து கேட்டதும் தான் பால்ய சினேகிதன் என்று சொன்னான்.

''உள்ளே வாங்க!''

அவளைத் தொடர்ந்து உள்ளே போனான். ஹாலில் சுவர் ஓரமாக ஒரு மரக்கட்டிலில் ஓர் உருவம் சுருண்டு படுத்துக் கிடந்தது.

ஜெயதேவனின் உருவத்தையும் அவன் இருக்கும் நிலைமையையும் பார்த்த கைலாசம் அதிர்ச்சி அடைந்தான்.

''என்ன உடம்புக்கு? ஏன் இப்படி ஆயிட்டான் இவன்?''

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும், நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

**H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை - 3, போன் : 583213.**

**கிளை ஷோ-ரூம் கடை எண் : 7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)**

**தியாகராய நகர், சென்னை - 17. போன் : 443367**

**தேவேந்திரா புடைவைகள் கிடைக்கும் இடங்கள் :**

★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி – 110 005. போன்: 581050, 561786; ★ மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41, சரஸ்வதி மார்க், W.E.A. கரோல்பாக், புதுடில்லி - 110 005; ★ காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் என்டு) 9ஏ/40, W.E.A. கரோல்பாக், புதுடில்லி. போன்: 5723981; ★ பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடில்லி - 67; ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19; ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, பிவந்திவாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய் - 400 019; ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ.20, காமதேனு கோ.ஆப். பெஸ்டம்சாகர், செம்பூர், பம்பாய் - 89 (கிளாஸ் பாக்டரி அருகில்); ★ ஜெயஸ்ரீ, 2-ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா - 26; ★ திருமதி டி.எஸ். சகுந்தலா சீனிவாசன், 18/1-ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா அன்டு பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன்: 224357; 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து) பெங்களூர் - 560 003; ★ திருமதி துர்க்கம்பாள், 22, சேஷபுரம், தென்னூர், திருச்சி - 620 017; ★ திரு எஸ். சேதுராமன், 50/பி, பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம். போன்: 20972; ★ திருமதி எஸ். லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம் - 1 (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, சென்குப்தா தெரு, கோயம்புத்தூர் - 9; ★ ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர்.எஸ். புரம், கோவை - 2; ★ மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி - 1. போன்: 4191; ★ மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங் (உள்புறம்), 175/11, மேல வீதி, சிதம்பரம்; ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர்; ★ பாகீரதி மூர்த்தி, 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி; ★ எல். ஆர். பகவதி, 15, பள்ளத்தெரு, வடிவீஸ்வரம், நாகர்கோவில்; ★ கே.என். கிட்டப்பா, 61, யானைக்கட்டித் தெரு, சின்ன காஞ்சிபுரம்; ★ திருமதி கே. சீதாலட்சுமி, 41, 4-வது ட்ரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை - 28. போன்: 73244; ★ திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61. (பிள்ளையார் கோயில் அருகில்) போன்: 2343737; ★ சரோஜா கிருஷ்ணமூர்த்தி, ஏபி. 1186, 4-வது தெரு, தென்றல் காலனி, (பி.டி.சி. டிப்போ எதிரில்) அண்ணாநகர், சென்னை - 600 040; ★ பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை - 45; ★ திருமதி. சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை - 44; ★ கலா மோகன், 115, ராகவாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை - 11. போன்: 575483; ★ எஸ். பொன்னப்பன், 8.3.282, 2-வது பஜார், செகந்திராபாத் (ஆபி). போன்: 59562; ★ ராணி சாரீஸ், ராணி வி. சுந்தர்ராவ், 13, மஹால் 4-வது தெரு, (திருமலை நாயகர் மஹால் பின்புறம்), மதுரை - 625 001. போன்: 26295; ★ ஆர். கிருஷ்ணமூர்த்தி, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை; ★ திருமதி கமலா நாகஸ்வாமி, 52, சரஸ்வதி நகர், கடலூர். போன்: 112; ★ திருமதி பிரேமா குருராஜன், 1, எஸ். லக்ஷ்மி நிலையம், அரசினர் ஆசிரியர் பயிற்சி பள்ளி அருகில், தருமபுரி - 636 701; ★ எஸ். உமாராணி, 132, செட்டித் தெரு, பாண்டிச்சேரி.

**குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**

தயக்கத்துடன் கேட்டான் கைலாசம்.

''பக்கவாதம். நாலு மாசமா இப்படித் தான் இருக்கார். ஒரு வார்த்தைக் கூடப் பேச முடியலே! பேசவும் முயற்சி செய்ய மாட்டேங்கறார். தானா குணமாயிடும்னு டாக்டர் சொல்றார்! என்ன பாவம் செய் தார்னு தெரியலியே!''

மீண்டும் கைலாசத்துக்கு அதிர்ச்சியாக இருந்தது.

கைலாசம் மெள்ளக் கட்டில் அருகே சென்று அவன் அருகில் அமர்ந்து கொண்டான். அவன் சூன்யத்தை வெறித்துப் பார்ப்பதைப் போல இவனைப் பார்த்தான்.

''ஜெயதேவா, நான் கைலாசம் வந்திருக்கேன். என்னைத் தெரியறதா பாரு!''

அவன் வெறுமனே இருந்தான். பிறகு மெள்ள அவன் கண்கள் ஈரமாயின. உதடுகள் அசைந்து மெள்ளத் துடிக்க ஆரம்பித்தன.

''என்னைத் தெரியறது இல்லே?''

மீண்டும் கேட்டான் கைலாசம்.

கண்களில் நிரம்பியிருந்த கண்ணீர் இப்போது கன்னங்களில் இறங்க ஆரம்பித்தது. 'தெரிகிறது உன்னை' என்பதை இவனால் இப்போது இப்படித்தான் வெளிப்படுத்த முடியுமோ என்னவோ!

''நீ வாய் விட்டுப் பேசணும். ஒங்கூட நெறையப் பேசணும்னு எத்தனையோ வருஷத்துக்கப்புறம் வந்திருக்கேன். நீ எல்லாத்துலயும் ரொம்ப கெட்டிக்காரன். எனக்குச் சின்ன வயசுலேருந்து இது தெரியும். என்னால செய்ய முடியாத விஷயத்தை ஒன்னால ரொம்பச் சுலபமாச் செய்ய முடிஞ்சிருக்கு. இப்பவும் ஒன்னால எதையும் செய்ய முடியும். ஆகவே, நீ முயற்சி பண்ணி நான் கேக்கற கேள்விக்கு நல்லா யோசிச்சு, சரியா பதில் சொல்லணும்...'

ஜெயதேவன் மெள்ள கண்களை மட்டும் திருப்பிக் கைலாசத்தைப் பார்த்தான். கைலாசம் அவன் அருகில் நெருக்கமாக அமர்ந்து கொண்டான்.

''அப்போ, அன்னிக்கு... சின்ன வயசுல சவுக்குத் தோப்புகிட்டே நாம ரெண்டு பேரும் ஒரே சமயத்துல குறி வச்சு ஒரு கிளியை கல்லால அடிச்சமே... ஞாபகம் இருக்கா...?''

ஜெயதேவன் வெறுமனே இருந்தான். இத்தனை நேரம் இவன் மீது படிந்திருந்த தன் பார்வையை இப்போது வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். அவன் யோசிக்கிறான் என்று கைலாசம் புரிந்து கொண்டான்.

''ஜெயதேவா, நல்லா யோசனை பண்ணு...''

மீண்டும் மீண்டும் அந்த நிகழ்ச்சியை அவன் நினைவுக்குக் கொண்டு வர முயற்சி செய்தான். ஜெயதேவனின் முகத்தில் கடைசியில் லேசான மாறுதல் ஏற்படுவதைக் கண்டான்.

''ஞாபகம் இருக்கு இல்லே!''

''ஆமாம்'' என்று மிக்க சிரமத்துடன் ஜெயதேவன் தலையை அசைத்தான்.

''இப்பச் சொல்லு. நான் அடிச்ச கல்லுப் பட்டு அந்தக் கிளி கீழே விழுந்ததா, இல்லே நீ அடிச்ச கல்லுப் பட்டு இறக்கை முறிஞ்சு கீழே விழுந்து துடிதுடின்னு துடிச்சுதா? இப்போ இருக்கற இந்த நிலைமையில ஒன்னால சொல்ல முடியாட்டாலும் பரவாயில்லே 'நான்'னு ஒரு வார்த்தையில சொன்னாக் கூட போதும் நான் புரிஞ்சுக்குவேன்!''

ஜெயதேவன் மெள்ளத் தன் உதடுகளை அசைக்க ஆரம்பித்தான். உடனே கைலாசம் தன் முகத்தை அவன் முகத்தருகே கொண்டு போய் அவன் என்ன சொல்லப் போகிறானோ என்று கவலையுடன் கேட்டான்.

''நீதான்!''

ஜெயதேவன் சொல்லி விட்டுத் நிறைவுடன் சோர்ந்து படுத்துக் கொண்டான்.

கைலாசத்திற்கு அதிர்ச்சியாகவும் ஏமாற்றமாகவும் இருந்தது.

உண்மையில் அன்று 'நான் அடித்த கல் பட்டுத்தான் கிளி கீழே விழுந்தது' என்று திரும்பத் திரும்பச் சொன்னவன், பல வருடங்களுக்குப் பிறகு இன்று, 'நீ அடிச்ச கல் பட்டுத்தான் கிளி விழுந்தது' என்று ஏன் மாற்றிச் சொல்கிறான் என்று புரியாமல் குழம்பினான் கைலாசம்.

பனங்காட்டுச் சாமியார் தனக்கு இன்னும் குழந்தை பாக்கியம் ஏற்படாததற்குக் காரணம் 'பட்சி தோஷம்' என்று கூறியது ஒருவேளை உண்மையோ என்று நினைத்தான்.

நாளைக்கே அவரிடம் போய் அதற்கான பரிகாரம் என்ன என்று கேட்டு முதலில் அதைச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தான்.

அன்றிரவு அவன் வீட்டில் -

அவன் மனைவி சுலோசனா என்றும் இல்லாத உற்சாகத்துடன் காணப்பட்டாள்.

அவனை நெருங்கி வந்து மிக ரகசியமாக அவன் காதில் தான் கருவுற்றிருப்பதைக் கூறினாள்.

கைலாசம் அவளை அளவற்ற மகிழ்ச்சியுடன் சேர்த்து அணைத்துக் கொண்டான். கூடவே, 'எதற்கும் பட்சி தோஷத்துக்குப் பரிகாரம் பண்ணி விடலாம்' என்றும் அவனுக்குத் தோன்றியதுதான் ஆச்சர்யம்!

# உங்கள் கண்மணி தத்தி தத்தி முதல் அடி எடுத்து வைக்குமுன்...

# அக்குழந்தை லட்சாதிபதியாக வளர்வதற்கான வலிமையான அடியை நீங்கள் வைத்திடுங்கள்.

நீங்கள் அறியாமலேயே நாட்கள் பறந்து உங்கள் கண்மணி வளர்ந்து வெளியுலகில் காலடி எடுத்து வைக்கும் நேரம் வந்து விடும். வாழ்க்கையை தனியாக எதிர் நோக்க. உங்கள் இன்றைய ஆலோசனை— உங்கள் கண்மணியின் நாளைய நல்ல ஆரம்பம். யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள்— உங்கள் சிறிய சேமிப்பும் உங்கள் கண்மணியை லட்சாதிபதியாக்குவதை காணலாம். நீங்கள் ஒரு பெரிய தொகையை ஒருமிக்க முதலீடு செய்யலாம் அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் முதலீடு செய்யலாம். உங்கள் கண்மணி 21 வயதாகும்போது இப்பரிசும் பக்குவமடைகிறது. இத்தொகையை அவன் அவசியப்படி செலவாக்கலாம்.—



இப்பொழுது ஒரு வசதியான சலுகை. இப்பணத்தை உங்கள் குழந்தை 18 வயதான பின் வருடத்திற்கு இரு முறை பெறலாம். அதாவது தேவை ஏதுவாயினும் இதை உபயோகித்துக் கொள்ளலாம். மீதிப்பணம் உங்கள் குழந்தை 21 வயதாகும்வரை வளர்ந்து கொண்டிருக்கும்.—

மேலும் விவரங்கட்கு அணுகுங்கள்: எங்களது ஏஜெண்டுகள், முக்கிய பிரதிநிதிகள், ஸ்பென்சர் அண்டு கம்பெனியின் கிளைகள், ANZ கிரிண்ட்லேஸ் பாங்கியின் கிளைகள், சென்னையில் ஸ்டாப் அண்டு ஷாப் செலின் ஸ்டோர்ஸ் லிட். மற்றும் ஹைதராபாத்தில் பஞ்சவடி துர்பர் மார்க்கெட்.—

**டிவிடெண்ட் இப்பொழுது 13% ஆக அதிகரித்துள்ளது. நினைவிருக்கட்டும் 5 வருடத்திற்கு ஒரு முறை போனஸ் டிவிடெண்டும்* அளிக்கப்படும்.**

* 1986-91ற்காக அறிவிக்கப்பட்ட போனஸ் டிவிடெண்ட் 3%



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

ஒரு கோடி யூனிட்தாரர்களின் சேவைக்கென சமர்ப்பணம்

# யூனிட் ட்ரஸ்ட்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள்.

அனைத்து செக்யூரிட்டிகள் முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க் கொண்டதாகும். நீங்கள் எந்த முதலீடும் செய்வதற்கு முன் உங்களுடைய முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது.

UTI 1702 91 TM C

**Zonal Office:** 45, Second Line Beach, Madras 600 001. Ph: 587433, 562257. **Branch Office:** ☐ **Trichy** • 104, Salai Road, Woraiyur, Tiruchirapalli 620 003. Ph: 32837.

**Our Chief Representatives in Tamilnadu** ☐ ANNA DIST. • **S. Jeyachandran,** Dindigul, Ph: 3535 ☐ COIMBATORE • **A. Dhanabal,** Ph: 26313 ☐ DHARMAPURI • **S.A. Mathaiyan,** Ph: 6152 ☐ KAMARAJAR DIST. • **R. Venkateswaran,** Rajapalayam, Ph: 22433, 21360, 21771 ☐ KANYAKUMARI • **S. Subash Chandra Bose,** Nagercoil, Ph: 3474 ☐ MADURAI • **M. Ramamoorthy,** Ph: 43179 ☐ NORTH ARCOT • **P. Narayanan,** Vellore, Ph: 21575 ☐ NILGIRIS • **M. Madhavan Nambiar,** Coonoor, Ph: 21037 ☐ PERIYAR DIST. • **K. Jyothi Ramalingam,** Erode, Ph: 78265, 71785, 74785 ☐ P M DIST. • **R. Ramasamy,** Karaikudi, Ph: 2277 ☐ RAMANATHAPURAM • **A. Balakrishnan,** 45, North Car Street, Ramanathapuram 623 501 ☐ SALEM • **N.K. Inkarsal,** Ph: 66414 ☐ SOUTH ARCOT • **S. Balakrishnan,** Cuddallore, Ph: 377, 46 ☐ THANJAVUR • **K. Muthusamy,** Ph: 20374 ☐ TIRUNELVELI • **P. Venkatraman,** Ph: 26314 ☐ VOC DIST. • **K. Ramamoorthy,** Tuticorin, Ph: 21311.

# எம்.ஏ.எம்.: சுடர்விடும் வைரம்

**எம். ஏ. எம். ராமசாமி தொழிலதிபர் மட்டுமல்ல; ஸ்போர்ட்ஸ்மேன், நிர்வாகி, பக்திமான், மனிதாபிமானி, தர்மவான் என்று எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் சுடர் விடும் மனிதர். தமது அறுபதாவது பிறந்த நாளைக் கொண்டாடும் எம். ஏ. எம். அவர்களைப் பற்றிச் சொல்லுகிறார் அவருடன் நெருங்கிப் பழகி வரும் திரு. வைத்தியநாதன் :**



தொழிலதிபர் எம். ஏ. எம்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் கட்டப்பட்டுக் கொண்டிருந்த போது, அவ்வப்போது வந்து பார்வையிடுவார் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார். மரத்தடி நிழலில் நின்று கொண்டு, கட்டடங்கள் எப்படி உருவாகப் போகின்றன என்று கற்பனை செய்து பார்ப்பார். டாக்டர் எம். ஏ. எம். அவர்களும், ஆக்கபூர்வமான எதிர்காலக் கற்பனையில் மட்டுமின்றி, வேறு பல விஷயங்களிலும் அவரது பாட்டனாரைப் போலத்தான்.

அதற்கேற்றாற்போல், ராஜா சர் பிறந்தது செப்டம்பர் 30. எம். ஏ. எம். பிறந்த தேதியும் செப்டம்பர் 30 தான்! ராஜா சர் அவர்களின் அறுபதாம் ஆண்டு விழா செப்டம்பர் 28, 1941. எம். ஏ. எம். அவர்களின் அறுபதாவது பிறந்த நாள் விழா செப்டம்பர் 28, 1991!

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவியவர் என்ற முறையில், புரோ சான்ஸ்லர் பொறுப்பு அண்ணாமலையாருக்குப் பிறகு அவரது குமாரர் முத்தையா செட்டியார் அவர்களுக்கு வந்தது. அவருக்குப் பின் யார் பொறுப்பேற்பது என்ற நிலை வந்த போது, எம். ஏ. சிதம்பரம் கூறினார் : 'ராமசாமிதான் இந்தப் பொறுப்பைத் திறமையாக நிர்வகிப்பார். அவர்தான் பார்க்க வேண்டும்!'

நிர்வாக விஷயத்தில், பொறுப்பை ஒருவரிடம் ஒப்படைத்து விட்டார் என்றால், முழு நம்பிக்கையோடு அவரைச் செயல்பட விடுவார். அப்புறம் அதைப் பற்றி அவ்வப்போது விசாரித்துத் தெரிந்து கொள்ளுவார். 'எல்லாம் சரியாக இருக்கிறது அல்லவா? சரி... அப்புறம்?' என்று அடுத்த விஷயத்துக்குப் போய் விடுவார். பிரச்னை என்றால் மட்டுமே மேலும் விசாரித்து யோசனை வழங்குவார். முக்கியமான பிஸினஸ் சமாசாரங்களில், 'நான் படித்துப் பார்த்து விட்டேன். சரியாக இருக்கிறது. எதற்கும் நீங்களும் ஒரு தடவை பார்த்து விட்டுக் கையெழுத்துப் போடுங்கள்!' என்பேன்.

'நீ படிச்சப்புறம் நான் வேறு எதற்குப் படிக்கணும்? அது என் பேரிலேயே எனக்கு நம்பிக்கை இல்லை என்றல்லவா ஆகிவிடும்!' என்று கையெழுத்துப் போடுவார். அதனால்தானோ என்னவோ, அவரிடம் பணிபுரிகிறவர்களுக்கும், அப்படி ஒரு விசுவாசம்.

சார்ட்டர்ட் அக்கவுண்டெண்ட்டான என் சகோதரர் ஜெயராமன் அவரது நிதி ஆலோசகர். ''ஜெயராமன் சொல்லி விட்டான். அப்படியே செய்து விடலாம்!'' என்பார். அப்படி உறுதியான நம்பிக்கை.

செட்டிநாடு சிமெண்ட்டின் நிர்வாக இயக்குநர் சபாரத்தினம் குடும்பம், பரம்பரையாக ராஜா சர் வீட்டில், மூன்று தலைமுறைகளாகப் பழகி வருகிறார்கள்.

''சபா, என்ன சொல்றீங்க?'' என்று ஏதாவும் ஒரு விஷயத்தில் அபிப்ராயம் கேட்பார்.

சபாரத்தினம் சொல்லி விட்டு, அவர் பதிலை அதற்கு எதிர்பார்க்கிற மாதிரி தொனித்தால், ''என்னை ஏன் கேட்கறீங்க? உங்க அபிப்ராயம் சரியாகத்தான் இருக்கு!'' என்று அப்போதே அங்கீகரித்து விடுவார்.

கிரானைட் தொழிற்சாலை துவங்குகிற போது, 'இதைப் பொது மக்களும் பங்குகள் வாங்குகிற மாதிரி, மூலதனம் திரட்டி ஆரம்பிக்கலாமே?' என்று சொன்னேன்.

அரை நிமிடம் யோசித்தார் எம். ஏ. எம். ''கிரானைட் இண்டஸ்ட்ரி இப்போதுதான் வியாபார ரீதியாக ஒரு தொழில் என்ற பக்கு வத்தை எட்டியிருக்கிறது. இதில் பொது மக்கள் ஏன் ரிஸ்க் எடுக்க வேண்டும்? நான் ஒருவன் எடுத்தால் அது என்னோடு. வெற்றி கரமாக இயங்கினால் அரசுக்கு அந்நியச் செலாவணி கிடைக்கும். லாபம் வந்தால் நான் அதை எப்படிப் பயன்படுத்துவேன் என்பது உனக்குத் தெரிந்ததுதானே?'' என்றார்.

இதாலிக்கு இயந்திரங்கள் வாங்கச் சென்றோம். பாலிஷிங் மெஷின் ஒன்று தேர்வு செய்தோம். 'விலை, மற்ற அது போன்ற இயந்திரங்களோடு ஒப்பிடும் போது குறைவுதான்' என்று நான் சொன்னதும் ஓகே சொல்லி விட்டார். அங்கிருந்து லண்டனுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். மறுநாள் லண்டனிலிருந்து ஒரு போன் கால். அந்த மெஷினை விட, உலகில் நெ. ஒன்றாக இருக்கும் இன்னொரு இயந்திரத்தைப் பற்றித் தாம் கேள்விப்பட்டதாகவும், விலை சற்றுக் கூடுதலாக இருந்தாலும் அது நமக்குப் பயனுள்ளதாக இருக்கும் என்று தோன்றுவதாகவும் சொல்லி விளக்கினார். ஓர் இஞ்சினீயர் என்ற முறையில் என் அபிப்ராயத்தைக் கேட்டார். நான் அசந்து போய் விட்டேன். அவரே முடிவெடுத்து அதையே வாங்கச் சொல்லியிருக்கலாம். ஆனால் அபிப்ராயம் கேட்டு அறிந்து, முடிவெடுக்கும் அந்தப் பெருந்தன்மைக்கு மறுபெயர்தான் எம். ஏ. எம்.

அதே போல, தொழிற்சாலையில் உபயோகித்த நீரைச் சுத்தப்படுத்தி மறுபடி பயன்படுத்தும் இயந்திரத்தைப் பார்த்து விட்டு, ''வைத்தியநாதன், இதைப் பார்த்தாயா?'' என்று என்னை அழைத்துக் காண்பித்தார். ''நமக்கு எதற்கு இந்த மெஷின்?'' என்றேன். ''அப்படியானால் தண்ணீரை வேஸ்ட் செய்வது உனக்குச் சம்மதம்தானா? அதுதான் கூடாது!'' என்றார். அவரது தீர்க்க தரிசனம் அந்தப் பேச்சில் வெளிப்பட்டது.

'நான் தினம்தோறும் நடராஜப் பெருமானை வணங்குவேன். நாள்தோறும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்காகப் பாடுபடுவேன்' என்று எழுதி வைத்திருப்பார் அண்ணாமலையார்.

அதே போல், எம். ஏ. எம். அவர்கள் எந்த இடத்துக்குச் சென்றாலும், தனிப் பெட்டியில் நடராஜ விக்கிரகமும், தாயார்-தகப்பனார் படங்களும், பூஜைக்குரிய பொருட்களும் அவருக்கு முன்னாலேயே, அவர் தங்கும் அறைக்குப் போய்ச் சேர்ந்து விடும். அவற்றுக்கு மலர் தூவி வணங்கிய பிறகே அன்றைய வேலையை ஆரம்பிப்பார். அவரிடம் இன்னொரு வழக்கமும் உண்டு. வெளியூருக்குப் போவதற்கு முன்னால், இளம் வயதில் காலமான தமது தமையனார் குமாரராஜா முத்தையா செட்டியார் அறைக்குச் சென்று அந்தப் படத்தை வணங்கி விட்டுத்தான் புறப்படுவார், சொல்லிக் கொண்டு போகிற மாதிரி. பெரியவர்களிடம் அவர் காண்பிக்கும் மரியாதை அலாதியானது.

சபரி மலைக்குப் போக முடியாதவர்கள் எத்தனையோ பேர் இருப்பார்கள் என்று அறிந்தவுடன், அந்தக் குறையைத் தீர்க்க, தமது இஷ்ட தெய்வமான அய்யப்பனுக்கு, தாமே முன்னின்று அதே போன்ற கோயிலைக் கட்டினார். சிருங்கேரி பெரியவர்கள் மூலம், சபரிமலைக் கோயில் மேல் சாந்தியைக் கொண்டு வந்து, பூஜைகளைத் துவக்கி வைத்தார். கோயில் உருவாகி வரும் போது, எம். ஏ. எம். காண்பித்த அக்கறை, அப்படியே அவர் பாட்டனாரை நினைவூட்டியது.

கல்லூரி நாட்களில் அபாரமான டென்னிஸ் ஆட்டக்காரர். அவருடைய பேக் ஹேண்ட் ஸ்ட்ரோக் அநாயாசமானது.

குதிரைப் பந்தயங்களில் நூற்றுக்கு மேற்பட்ட 'கிளாசிக்' வெற்றிகள் கண்டு, கின்னஸ் சாதனையில் இடம்பிடித்தவர். இளம் வயதில் குதிரையேற்றம், போலோ எல்லாவற்றிலும் அவருக்கு ஈடுபாடு இருந்தது. அதிகாலையில் தமது குதிரைப் பண்ணைக்குச் சென்று அக்கறையுடன்



▶ நெம்பர் ஒன் சாதனை (கையில் வெற்றிக் கோப்பையுடன்)

# கல்கி வாசகர்கள் அலசுகிறார்கள்...

◆ மக்கள் நன்கு உழைத்து நாட்டை முன்னேற்ற வேண்டிய காலகட்டத்தில், லாட்டரி சீட்டுகள் உள்ளத்தைப் பாதிக்கும் ஒரு வகையான போதை வியாபாரம். லாட்டரி சீட்டுகள் பெருமளவு (இந்தியாவிலேயே அதிகமாக தமிழகத்தில்) விற்பனையாகின்றன. இதற்கிடையே போலி லாட்டரி சீட்டுகளும்-மக்களின் பணத்தை அட்டை உறிஞ்சுவது போல் உறிஞ்சுகின்றன. நடுத்தர, மற்றும் கீழ்த்தட்டு மக்கள் உழைப்பின் பெரும்பகுதி லாட்டரியில் போய் விடும். எனவே அரசாங்கமே லாட்டரி நடத்தும் அவலத்தை நிறுத்தி, எல்லா லாட்டரிகளுக்கும் தடை விதிக்க வேண்டும்.

சென்னை - 83, டி. எஸ். டி. ராயன்.

◆ தலையங்கம் படித்தேன். தெருவுக்குத் தெரு நர்சரிகளும், மெட்ரிகுலேஷன் பள்ளிகளும் தோன்றக் காரணம் என்ன? தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்ட அரசு பள்ளிகளில் கல்வியின் தரம் தாழ்ந்து போனதால்தானே! அரசு பள்ளி ஆசிரியர்களுக்கு, அரசின் சமூக நலத் திட்டங்களுக்கு - குடும்ப நலத் திட்டம் உட்பட - ஆள் பிடிப்பதற்குத்தானே நேரம் சரியாக இருக்கிறது. வயிற்றுப் பசியைத் தீர்க்கச் சத்துணவு வழங்குவதில் உள்ள ஆர்வம், குழந்தைகளுக்கு அறிவுப் பசியைத் தீர்ப்பதில் அரசுக்கு இல்லையே? எந்தப் பொதுத் தேர்விலாவது, அரசுப் பள்ளி மாணவன் முதல் நிலையில் வந்திருக்கிறானா? ஆகவே அரசுப் பள்ளிகளில் தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்ட கல்வியின் தரம் உயர்ந்தாலே, தமிழைக் கட்டாயப் பாடமாக்கும் அரசின் நோக்கம் நிறைவேறும். மேலும் நாகரிக மோகம் கொண்டு, வசதியற்ற நிலையிலும் ஆங்கில பயிற்று மொழிப் பள்ளிகளைத் தேடும் பெற்றோரின் மனநிலையும் மாறும். இதனை அரசு உணருமா?

திருச்சி - 14, ரத்னபாலன்.

◆ அதிகாரிகளை இன்ன கட்சியைச் சார்ந்தவர் என்று பட்டயம் கட்டும் பழக்கம் இப்போதெல்லாம் அரசியல்வாதிகளிடம் ஏற்பட்டு, இன்னார் இன்ன கட்சியைச் சார்ந்தவர் வேறு இடத்திற்கு மாற்றுங்கள் என்று கோரிக்கை வைப்பது, ஆளுங்கட்சி சட்டப் பேரவை உறுப்பினர், அமைச்சர் ஆகியோருக்கு வாடிக்கையாகி விட்டது. அதிகாரிகள் அந்தந்த ஆளுங்கட்சி நிர்வாகத்தில் விதிக்கப்படும் சட்டங்கள், நடைமுறைகளைப் பின்பற்றுபவர்கள்தான். எந்தக் கட்சி ஆட்சியோ அக்கட்சியின் சார்பில் அமைவதுதான் அதிகாரிகளால் இயலும். எனவே, தேவையின்றி அவர்களைச் சந்தேகிக்கும் மனப்பான்மை அகல வேண்டும்.

திருவாரூர், அ. சம்பத்.

◆ பாபர் மசூதியை ராமர் கோவிலுக்காக விட்டுக் கொடுப்பதால் முஸ்லீம்களாகிய நாங்கள் குறைந்து விட மாட்டோம். காரணம் நாங்கள் படைப்புகளை வணங்குவதில்லை; படைப்பாளியை வணங்குகின்றோம். சாலையோரத்தில் கூட துண்டை விரித்து, மனத்தால் இறைவனைத் தொழுவோம். பி. ஜே. பி. பாபர் மசூதியை வாங்கி விட்டால் அப்புறம் தொடர்ந்து பல மாநிலங்களில் பல மசூதிகள் சம்பந்தமாகப் பிரச்னைகளைக் கிளப்புவார்கள். இதை நினைத்துத்தான் பாபர் மசூதியை விட்டுத் தரத் தயங்குகிறோம். அதே சமயத்தில் நீதிமன்றத் தீர்ப்பு எதுவாக இருந்தாலும் மதிக்கத் தயாராயிருக்கிறோம்.

திருச்சி - 8, எம். கதிஜா ஹனீபா.

◆ ஒரு பத்திரிகையின் போஸ்டரில் 'அ. தி. மு. க. அரசு டிஸ்மிஸ் ' என்றதோர் செய்தி காணப்பட்டது. இச் செய்தி குறித்து வானொலியிலோ, தொலைக்காட்சியிலோ அல்லது வேறு எந்தப் பத்திரிகையிலோ தகவல் வந்ததாகத் தெரியவில்லை. செய்திகளைத் தவறாகவோ, திரித்தோ, மிகைப்படுத்தியோ கூறி, மக்களின் கவனத்தைச் சிதறடிப்பதென்பது பத்திரிகை தர்மம் ஆகாது. பத்திரிகை விற்பனை ஒன்றையே மனதிற் கொண்டு, போஸ்டர்களில் தவறான, உண்மையற்ற செய்திகளைக் கொட்டை எழுத்தில் கொடுத்து, மக்களின் கவனத்தைக் கவர்வதென்பது தற்போது வாடிக்கையாகி விட்டது. பத்திரிகையை வாங்கிப் பிரித்து, உள்ளே செய்தியைப் படித்தால் முன்னுக்குப் பின் முரணாக, போஸ்டர் செய்தியிலிருந்து மாறுபட்டு வேறு மாதிரி இருக்கும். இதுபோன்ற தவறான செய்திகளைத் தந்து மக்கள் மத்தியில் குழப்பத்தை

---

விசாரிப்பார். அறிவியல் ரீதியாகக் குதிரைப் பந்தயத்தை அணுகுவார். 'இது ஒரு புகழ் பெற்ற ஸ்போர்ட். இதில் நான் நெ. ஒன்னாக இருக்க வேண்டும்' என்பார்.

இந்திய ஹாக்கி ஃபெடரேஷன் தலைவராக இவர் இருந்தபோதுதான் உலகக் கோப்பையை வென்றது இந்தியா.

தமிழக அரசின் திட்ட கமிஷனில், தொழில் துறைக்கும் எரிசக்தித் துறைக்கும் சேர்த்து நியமிக்கப்பட்டிருக்கும் ஒரே உறுப்பினர் எம். ஏ. எம். எடுத்துக் கொண்ட பணியை சீரியஸாக விவாதித்து, பல அரிய தகவல்கள் திரட்டி, அவர் தயாரித்து அளித்த அறிக்கை, தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு மிகவும் பயன்படும்.

பாட்டனாரைப் போலவே தமிழிசையிலும், தமிழிலும் ஆர்வம் காண்பித்து, அவற்றின் வளர்ச்சிக்காக வருடாந்தர விழாக்களும், அறிஞர் பெருமக்களுக்கு விருதுகளும் வழங்கி, அந் நிகழ்ச்சிகளில் முழு ஈடுபாட்டோடு பங்கெடுத்துக் கொள்

உண்டுபண்ணும் முதிர்ச்சியடையாத நான்காம் தரப் பத்திரிகைகள் இருக்கும் வரை நம் நாட்டு அரசியல் ஒரு போதும் ஸ்திர நிலைக்கு வராது.
ராக்ஃபோர்ட் சிட்டி, எஸ். ஆர். கோபால்.

◆ வடக்கு வாசல் பகுதியில் மாதிரிக்கு ஒரே ஒரு தமிழ்க் கதை என்ற பத்தியில் மற்ற மொழிகளிலிருந்து இந்திக்கு மொழி மாற்றம் செய்வது பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். அதையே ஆங்கிலத்தில் மொழி மாற்றம் செய்திருப்பது பற்றியும் குறிப்பிட்டுத் தமிழிலிருந்து மௌனியின் சிறுகதை மட்டுமே என்றீர்கள். தமிழ்நாட்டில் தமிழ் தவிர வேறு மொழி இருக்கக் கூடாது என்னும் போது மற்ற மொழியிலிருந்து எப்படி மாற்ற முடியும்? பல மொழிபெயர்ப்பாளர் இருந்தும் தமிழ்நாட்டுக்கு இந்தக் கதி... தமிழில் பேசும் பேச்சே சுத்தமில்லை. தமிழ் வளர்ச்சியே குறைவு. வளர்ச்சியைத் தடுப்பதற்குப் பலர். வளர்ப்பதற்குச் சிலர் கூட இல்லை என்கிற நிலை. கல்வி கற்ற அறிஞருக்குத் தாங்கள் குறிப்பிட்டது ஒரு பாடமாக இருக்கும்.
எலப்பாக்கம், நா. விஜேந்திரன்.

◆ இன்றைய இளைய சமூகத்தினரைக் கெடுக்கும் போதை மருந்துகளுக்கு எந்தவிதத்திலும் குறைந்ததல்ல, 'பலான படங்கள்'. இப் படங்களைத் திரையிடுவதற்கென்றே ஒவ்வோர் ஊரிலும் சில குறிப்பிட்ட திரை அரங்குகள் இருக்கின்றன. இவற்றைப் பார்க்க, அரும்பு மீசை கூட முளைத்திராத மாணவர்கள் புத்தகங்களுடன் சினிமாக் கொட்டகைக்கு வருவதைக் கண்டால், நாளைய நம் நாட்டின் நிலையை நினைத்து வருந்தாமல் இருக்க முடியவில்லை. 'ப்ளூபிலிம்' வீடியோ கேஸட்டுகளை எங்கு வேண்டுமானாலும் வாங்கி விடலாம் என்ற நிலை. இவையெல்லாம் காவல் துறையினருக்குத் தெரியாத விஷயங்களில்லை. நம் நாட்டு கலாசாரத்திற்குச் சற்றும் பொருந்தாத, இதுபோன்ற பலான படங்களுக்குத் தடைவிதித்துக் கடுமையான சட்டம் கொண்டு வர நம் முதல்வர் ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது?
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

◆ ''விவசாயியான தமக்கு விவசாயத் துறையைக் கொடுத்து, விவசாயிகளைக் கௌரவப்படுத்தியிருக்கிறார் முதல்வர்!'' என்ற அமைச்சர் கு. ப. கிருஷ்ணனின் வாதத்தை ஏற்க முடியாது. உண்மையிலேயே தமிழக முதல்வர் ஜெயலலிதாவுக்கு விவசாயிகள் மீது நன்மதிப்பு இருக்குமேயாயின் தமிழக விவசாயிகளையே அகௌரவப் படுத்தும் வகையில், மைய அமைச்சர் தெம்பரத்தின் மீதான அ.தி.மு.க. வினரின் கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டத்தையும் வெறித் தாக்குதலையும் திசை திருப்பி, ''விவசாயிகள்தான் ப. சிதம்பரத்தைத் தாக்கினார்கள்,'' என்று முதல்வரே அறிக்கை வெளியிட்டு, ''பழி ஓரிடம்; பாவம் வேறிடம்'' எனச் செயல்பட்டிருப்பாரா?
கோவை, கே. ஆர். விஜயா.

◆ எழுபது லட்ச ரூபாய்ச் செலவில் எம்.ஜி.ஆரின் நினைவிடத்தை மாற்றியமைக்கப் போவதாக முதல்வர் கூறியுள்ளார். ஒருவரது நினைவு வளரவும் நிலை பெறவும் அவரது நினைவிடம் காரணமாவதில்லை. தவிரவும், தற்போதைய நினைவிடத்தை அமைத்தவர் மீதுள்ள தனிப்பட்ட வெறுப்பின் காரணமாய்த்தான் இந்த முடிவு. ஆட்சியாளர்களின் தனி விருப்பு வெறுப்புக்களுக்குச் செலவிட, மக்கள் வரிப்பணம்தானா கிடைத்தது? அவரது சொந்தப் பணத்தையோ கட்சிப் பணத்தையோ வாரியிறைத்தால் கேள்வியே இல்லை. அதற்கு மாறாக, இந்தப் பணத்துடன் - தேவையானால் இன்னமும் கூட அதிகம் - முதலீடு செய்து தொழிலகம் ஒன்றைத் துவங்கி, அதற்கு மறைந்த தலைவரின் பெயரைச் சூட்டினால் அவரது நினைவும் வாழும். அதனால் சில நூறு குடும்பங்களும் வாழும். இதுவே எம். ஜி. ஆர். விரும்பும் வழியாகவும் அவருக்கே உரிய LIVING MONUMENT ஆகவும் திகழும். முதல்வர் சிந்திப்பாரா?
மதுரை - 10, நூர்.

◆ உத்தமன் என்று பெயர் வாங்க நான் விபூதி, குங்குமம் கொடுத்து, ஜோஸ்யம் சொல்லிக் கூட பாப்புலராகி விடலாம். பிரபலமாக நான் பேசவில்லை. என் கருத்துக்கள் ஆழ்ந்த யோசிப்பில் வந்தவை. எல்லா மரபுகளும் உடைக்கப்படுகின்றன என்பது என் வாதம். இதற்குப் பலதாரத் திருமணம் ஓர் உதாரணம். மரபுதான் வாழ்க்கையென்பது திர்மூடச் செயல். வாழ்வுக்கு மரபு என்பதே உண்மை. Fact. இது உலக இயல்பு.
சென்னை - 4, பாலகுமாரன்.

*(பலதாரத் திருமணம் என்பதுதான் மரபாக இருந்தது. பின்னர் அது திர்மூடத்தனம் என்பதால்தான் உடைக்கப்பட்டு நாகரிக வளர்ச்சியில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நல்வாழ்வுக்கு ஏற்ற புதிய மரபு உருவாகியுள்ளது. - ஆர்.)*

பவர் எம். ஏ. எம்.

எல்லாவற்றிலும் தாராளம். தம்மை நம்பி வருவோரிடம் பரிவு. தம்மோடு பணி செய்கிறவர்களிடம் கருணையும் அன்பும் காட்டும் 'ஜென்டில்மேன்' எம். ஏ. எம்.

என் தகப்பனார் வைத்திய சுப்பிரமணிய அய்யரைத் தமது தகப்பனார் போலவே கருதினார். அவர் காலமான அன்று, தம்முடைய பென்ஸ் காரில் பின்னால் எங்கள் மடி மீது அவர் உடலைக் கிடத்தி, தாமே அப்போலோ மருத்துவமனையிலிருந்து காரை ஓட்டிக் கொண்டு வந்ததை மறக்கவே முடியாது. நாங்கள் எவ்வளவு சொல்லியும் கேட்காமல், தமது டிரைவரை வேறு காரில் பின்தொடரச் சொல்லி விட்டு, கொட்டும் மழையில் அத்தனை ஜாக்கிரதையாக ஓட்டி வந்தார். அதற்கு முன் நான்கு வருடங்களாக அவர் கார் ஓட்டவேயில்லை. அதற்குப் பிறகும் அவர் கார் ஓட்டவில்லை!

பேட்டி, கட்டுரை : எஸ். வி. என்.

# கலைஞர் இல்லாத சட்டசபை



சந்தான முத்தான விஷயம்?



மைசூரில் அவமானம்



பணமுடிப்புப் பெறலாமா?

● அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.

? விளையாட்டுக்களில் புகழ்பெற்ற மரடோனாவிற்குப் பதினாறு மாதச் சிறை வாசம் விதிக்கப்பட்டிருக்கிறதே?

! போதை மருந்து கடத்தல் சட்டம், விளையாட்டு வீரர் என்று கருணை காட்டவில்லை. அந் நாட்டின் அரசியலும் சட்டத்தின் செயல்பாட்டில் குறுக்கிடவில்லை!

● ஆர். அண்ணாதுரை, திருப்பத்தூர்.

? 'பிராமண கலாசாரத்தை ஒழிப்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட இயக்கம் இது' எனக் கூறிய வீரமணி, ஜெ.விடம் பண முடிப்புப் பெற்றது சரிதானா?

! பண முடிப்புக் கிடைத்தால் வேண்டாம் என்று துணிந்து கூறுகிற உயர்ந்த கலாசாரம் இனிமேல்தான் நம் நாட்டில் உருவாக வேண்டும். இப்போதைக்கு அது விரல் விட்டு எண்ணி விடக்கூடிய ஒரு சிலரிடம் மட்டுமே இருக்கிறது. எனவே வீரமணி பெற்றுக் கொண்டதில் வியப்பில்லை. 'ஜெ. கொடுத்தது சரியா' என்பதுதான் பிரச்னையாகிறது. ஒரு பக்கம் வீரமணிக்குப் பண முடிப்பு. மற்றொரு பக்கம், 'தி. மு. க. பிராமணதுவேஷத்தை வளர்ப்பதாகக்கூறி தாக்குதல்... புரியலைடா சாமி!

● பால. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்.

? சென்னைக் கல்லூரி மாணவர்களை, 'பெத்தடின் போதையில் உறங்கும் புலிகள்' என துரைமுருகன் விமர்சித்தது குறித்து?

! துகிலுரியும் படலம் முடிந்து, செருப்படிப் படலம் நடத்தி, இப்போது தூண்டி விடும் படலத்துக்கு வந்திருக்கிறார், துரைமுருகன். கலைஞருக்குக் கெட்ட பெயர் தேடித் தர, இவரைப் போன்றவர்களே போதும், வெளி எதிரிகளே தேவைப்படாது!

● அ. முஸ்தபா, தக்கோலம்.

? கலைஞர் இல்லாத சட்டசபை எப்படி இருக்கிறது?

! அ. தி. மு. க. பொதுக் குழு கூடியது போல இருக்கிறது!

● இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? 'வரும் தீபாவளிக்கு பாமாயில் கிடைக்க ஏற்பாடு செய்யப்படும்' என்று சட்டசபையில் முதல்வர் கூறியிருக்கிறாரே?

! இது தெரியாமல், 'சமையல் எண்ணெய் இறக்குமதி கிடையாது' என்று மத்திய நிதி அமைச்சர் முரண்டு பிடிக்கிறாரே, அதுதான் கவலையாயிருக்கிறது!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? அ. தி. மு. க. எம். எல். ஏக்கள் அனைத்து பேச, காங்கிரஸ் எம். எல். ஏக்கள் ஜெயலலிதாவை 'ஜான்ஸி ராணி', 'இந்தியாவின் தாட்சர்', 'தமிழகத்தின் இந்திரா' என்றெல்லாம் சட்டமன்றத்தில் வானளாவப் புகழ்கிறார்களே?

! புகழ்ச்சி என்பது அளவுக்கு அதிகமானால் இகழ்ச்சி (கேலி)யாகி விடும் என்பதை அறியாமல் பேசுகிறார்கள், பாவம்! ஜெ. கோபித்துக் கொள்ளக் கூடாது.

● எல். மாறன், மேல்பட்டி.

? முப்பெரும் விழாவில் சந்தான, முத்தான பெரிய விஷயம் ஏதும் கலைஞரால் அறிவிக்கப்படவில்லையே?

! ஏன், போஸ்டல் டியூஷன் உமக்குப் பிடிக்காதா!

● பாலசுப்பிரமணியன், சென்னை.

? காணாமல் போன 150 ரூபாயைக் கண்டு பிடிப்பதற்காக, மாணவிகளை நிர்வாணம் ஆக்கிச் சோதனையிட்ட பள்ளி முதல்வரின் செயல் குறித்து? இந் நிகழ்ச்சி இந்தியாவின் தலைநகரில் நடந்தது பற்றி...?

! தலைநகரில் என்ன, எங்கு நடந்தாலும் நாட்டுக்கே தலைகுனிவுதான். இங்கேயும்

கூடத்தான் சில காலம் முன்பு பள்ளியில் ஒரு சாமியார் ஒரு பெண்ணிடம் தகாத முறையில் நடந்து கொண்ட செய்தி வெளியானது. நம்பிக்கை அளிப்பது என்னவெனில், அவமானத்தை மௌனமாகத் தாங்காமல் - ஒளித்து விடாமல் - பகிரங்கமாகப் போராட இளம் பெண்கள் முன்வந்திருப்பது.

● அ. சு. கிருஷ்ணன், சென்னை.

? முதலமைச்சர் ஜெயலலிதாவைப் பார்த்துப் பேச முடியாமல் சட்ட சபையில் ஓர் அமைச்சர் தவித்தது எதைக் காட்டுகிறது?

! அமைச்சரவைக் கூட்டங்கள் அடிக்கடி நடக்க வேண்டும்; மனம் விட்டுப் பேச ஊக்குவிக்கப்பட வேண்டும் என்பதை. முதல்வரிடம் மரியாதை காரணமாக வார்த்தை தடுமாறினால் பாதகம் இல்லை; அச்சம் காரணமாகக் குளறுவது ஜனநாயகத்துக்கு உகந்ததல்ல.

● அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம் ❑

? ஜெயலலிதா எல். கே. ஜி. படிக்கும் போது அவரிடம் பலப்பத்தைத் திருடிய மாணவி மீது வழக்குத் தொடரப்பட உள்ளதாமே?

! இண்டலான கேள்விக்குப் பரிசு என்றால் இந்த வாரம் உமக்குத்தான்! பிடியுங்கள்!

● எம். பிரபு, குமராட்சி.

? நீங்கள் மிகவும் பெருமைப்படும் விஷயம்?

! உத்தரப்பிரதேச ஹிந்தி சமஸ்தான், வாஸந்தியின் இலக்கியப் பணிக்காக விரும் ரூ 10,000 சன்மானமும் அளிக்கிறது. வட இந்திய பின்புலத்தை வைத்து அங்கிருக்கும் பிரச்னைகளைத் தென் இந்திய மொழியில் பிரதிபலித்ததற்காக இந்தப் பாராட்டு. இந்தப் பணியைச் செய்வதில் வாஸந்திக்கு ஆதரவு அளித்த விதத்தில், கல்கிக்கும் அதன் வாசகர்களுக்கும் நிச்சயம் பெருமையில் பங்குண்டு.

● ராது ரவி, கும்பகோணம்.

? கருவிலுள்ள குழந்தையை ஸ்கேன் செய்யும் முறை தடை செய்யப்பட்டுள்ளதே?

! ஸ்கேன் செய்வதற்குத் தடையில்லை. மருத்துவ ரீதியாகத் தேவைப்பட்டால் செய்யலாம். ஆணா, பெண்ணா என்று அறிவதற்காக ஸ்கேன் செய்வதுதான் குற்றமாக்கப்பட்டுள்ளது. ஆண் என்றால் பிரசவம்; பெண் என்றால் அபார்ஷன் என்ற கொடுமையை ஒழிக்க ஒரு முயற்சி. அபார்ஷன் என்ற கொடுமையையும் சேர்த்து ஒழித்தால் பாராட்டலாம். இது பாதிக் கிணறு தாண்டிய கதை.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
அ. சண்முகசுந்தரம்,
37, நேரு தெரு,
சிட்லபாக்கம்,
சென்னை - 64.

● மைனர் முருகன், எடப்பாடி.

? மைசூரில் நடந்த பொதுக் கூட்டத்தில் டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தியை அவமானப்படுத்திய கன்னடக்காரர்கள் பற்றி?

! தவறுதான்; 'வள்ளுவர் சிலைக்கு இடமளிக்க மாட்டோம்' என்று சொல்வது அதை விடப் பெரிய தவறுதான். ஆனால் நாம் என்ன செய்கிறோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். கன்னட அறிஞர்களைப் பாராட்டிச் சிலை வைத்தோமா? கன்னட மேதைகளை அழைத்துப் பேசச் செய்து மரியாதை செய்தோமா? இப்போதாவது வள்ளுவர் வாக்குப்படி, இன்னா செய்த கன்னடக்காரர்கள் நாண, நன்னயம் செய்தால் புத்திசாலிகளாவோம்!

☛ தூண்டிவிடும் படலம்!



☛ விருதும் சன்மானமும்



## எப்படி இருக்கிறது?



☛ தீபாவளிக்குப் பாமாயில்...

# உங்கள் செல்வம்: பயப்படுவதற்கல்ல, பங்கு மார்க்கெட்!

'பங்கு மார்க்கெட்டில் புகுந்து பார்த்தால் என்ன? பணம் பண்ணலாமே?' என்று பலர் எண்ணுகிறார்கள். அதே சமயம் தயங்கவும் செய்கிறார்கள். 'நஷ்டம் வந்து விட்டால்?' என்று கவலைப்படுகிறார்கள்!

நல்ல நிறுவனங்களைத் தேர்ந்தெடுத்து அளவாக முதலீடு செய்தால் இந்தப் பயம் இல்லை. கைவசம் உள்ள எல்லாப் பணத்தையும் ஒரே நிறுவனத்தில் போடாமல் பலவற்றில் பிரித்து முதலீடு செய்வதும் புத்திசாலித்தனம்.

ஷேர் மார்க்கெட்டில், 'பிரதான மார்க்கெட்' என்றும், 'துணை மார்க்கெட்' என்றும் இரண்டு வகை உண்டு. பிரதான மார்க்கெட் என்பது, புதிய நிறுவனங்கள் தோற்றுவிக்கப்படும்போதோ, அல்லது ஏற்கெனவே உள்ள நிறுவனங்கள் தங்கள் நடவடிக்கைகளை விரிவுபடுத்தும் போதோ, அல்லது புதிய துறைகளில் புகும் போதோ முதலீடு தேவைப்படுவதால் பொது மக்களை அணுகுவதாகும். மூலதனப் பங்குகளை மக்களுக்கு விநியோகிப்பார்கள். இவை பெரும்பாலும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள பங்குகளாக இருக்கும். குறைந்தபட்சம் ஐம்பது பங்குகள், நூறு பங்குகளுக்கு விண்ணப்பிக்க வேண்டும் என்ற நிபந்தனையுடன் மார்க்கெட்டுக்கு வருவார்கள். சில நிறுவனங்கள் மிக நல்ல நிலையில் இருக்கும் போது பங்குகளைக் கூடுதல் விலைக்கு விநியோகிக்கின்றன. அதாவது பத்து ரூபாய் பங்கைப் பதினைந்து ரூபாய் அல்லது இருபது ரூபாய்க்குக் கூட வழங்கும். ஆயினும் இவற்றின் மதிப்பு, பங்கு மார்க்கெட்டில் சீக்கிரமே மேலும் உயர்ந்து விடும் என்பதாலும், இவற்றின் வருடாந்திர லாபப் பங்கீடு 30 சதம் 35 சதம் என்று இருக்கக் கூடுமாதலாலும் 'நஷ்டம் இல்லை; லாபமே' என்று நம்பப்படுகிறது.

இதிலெல்லாம் மக்களுக்கு உதவ ஷேர் புரோக்கர்கள் எனப்படும் நிறுவனங்கள் உள்ளன. இவை பிரதான மார்க்கெட்டில் பங்குகள் வெளியிடப்படும் போது அவற்றுக்கான விண்ணப்பப் படிவங்களை வேண்டுவோருக்கு அனுப்புகின்றன. நமது பெயரையும் விலாசத்தையும் இவர்களிடம் பதிவு செய்து கொள்ளலாம்.

மக்களிடம் முதலீடு கோரிச் சமீபத்தில் பிரதான மார்க்கெட்டுக்குப் பல பெரிய பெரிய நிறுவனங்கள் வந்தன. டாடா, பிர்லா, நிறுவனங்கள் கூட இதில் இருந்தன. பிர்லா நிறுவனம் ''பிர்லா - 3M'' என்றும் டாடா நிறுவனம் ''டாடா - டிம்கென்'' என்றும் புதிய தொழிலகங்களை ஆரம்பித்தன. அவற்றுக்காகத்தான் இந்த முதலீடு கோரிக்கை. இவற்றின் பங்குகளைப் பெற ஏராளமான மக்கள் போட்டியிட்டதால், கோரிய முதலீட்டுக்குப் பல மடங்கு அதிகமாகவே பணம் குவிந்தது! எனவே குலுக்கல் முறையில்தான் பங்குதாரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பங்குகள் வழங்கப்பட்டன. மற்றவர்களுக்குப் பணம் திருப்பித் தரப்பட்டது. இவ்வாறேதான் மற்ற பல நிறுவனங்கள் விஷயத்திலும் நடக்கும். சில சமயம் 200 பங்கு கேட்ட இடத்தில் 100 கிடைக்கும். 1000 கோரியிருந்தால் 500 கிடைக்கும். பாக்கிப் பணம் திருப்பித் தரப்படும். 'கிடைத்தவரை லாபம்' என்று திருப்தி அடைய வேண்டியதுதான்!

வெகு விரைவில் மூலதனம் கோரிப் பிரதான மார்க்கெட்டுக்கு வரவிருக்கும் சில நிறுவனங்களை இங்கு பட்டியலிடுகிறேன். இவற்றில் முதலீடு செய்வது லாபகரமாக இருக்கும் என்று நம்பப்படுவதால் இவை சிபாரிசு செய்யப்படுகின்றன:

1. UNIKOL BOTTLERS LTD; 2. LOTUS CHOCOLATE CO. LTD; 3. EMPEE SUGARS AND CHEMICALS; 4. PRAKASH INDUSTRIES.

இவை எப்படிப்பட்ட நிறுவனங்கள்? என்ன தயாரிக்கின்றன? அடுத்த வாரம் பார்க்கலாம்.

கூடவே, பங்கு மார்க்கெட்டில் 'துணை மார்க்கெட்' பற்றியும் 'டிபெஞ்சர்கள்' எனப்படும் கடன் பத்திரங்கள் பற்றியும் கூறுகிறேன்.

- வி. கோபாலன்

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.

# உங்கள் ஃபர்னிச்சரை பாலிஷ் செய்யும் நேரமா –

# அதை டச்வுட் செய்யுங்கள்.



ஃபர்னிச்சருக்கு பேசத் தெரியாது. அதனால் என்ன? ஒரு முறை பார்த்தாலே, எதற்கு பாலிஷ் அவசியம் எதற்கு தேவையில்லை என்பது புரிந்துவிடும். மேலும் அழகான ஃபர்னிச்சர் உயிரற்றுக் கிடந்தால், அதன் மதிப்புதான் என்ன? அதனால் அடுத்த முறை உங்கள் இல்லத்தை பெயிண்ட் செய்யும்போது ஃபர்னிச்சருக்கும் அவசியம் பாலிஷ் செய்யுங்கள் – டச்வுட் உபயோகித்து.

டச்வுட் உபயோகிப்பது மிகவும் எளிதானது. இதற்காக ஒரு பாலிஷ் செய்பவரை அழைக்கத் தேவையில்லை. உங்கள் பெயிண்டரே இதை பிரஷ்ஷினால் பூச முடியும்.

தெரியுமா? டச்வுட் பூசப்பட்ட ஃபர்னிச்சர் பல வருடங்களுக்கு புதியதுபோல் பொலிவுடன் இருக்கும்! ஏனென்றால் டச்வுட்-ல் பாலியூரிதேன் உள்ளது. அது ஃபர்னிச்சரை வலுவுடையச் செய்வதுடன், கறைகள், புள்ளி-கள் மற்றும் கீறல்களிலிருந்து பாதுகாக்கிறது. அதனால் ஃபர்னிச்சர் மீது சூடான தேநீர் விழுந்-தாலோ அல்லது ஃப்ளவர் வாஸ் உராய்ந்-தாலோ, நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

டச்வுட் க்ளாஸி ஃபினிஷின் பளபளப்பு எங்கிருந்தாலும் அறிய முடியும். ஆனால் நீங்கள் பளபளக்கும் ஃபினிஷை விரும்பா-விட்டால் உபயோகியுங்கள் டச்வுட் மேட் ஃபினிஷ். இனி டச்வுட் உங்களுடையது. நீங்கள் விரும்பினால் மேட் மற்றும் க்ளாஸி ஃபினிஷ்களை கலந்து உங்களுக்கு பிடித்த அளவு பளபளப்பை ஃபர்னிச்சரில் உண்டாக்கலாம். அதனால் ஃபர்னிச்சரின் தேவையை உணர்ந்து இப்பொழுதே அதன் நன்மைக்காக கொண்டு வாருங்கள் டச்வுட்.

Ogilvy & Mather 8149/TM

உங்கள் பெயிண்டரைப் பூசச் செய்யுங்கள்




ஃபர்னிச்சருக்கு புத்துயிர் ஊட்டிடும், எழிலுடன்

தயவு செய்து, டச்வுட் இன் பல ஆண்டு காலம் நிலவும் அழகினைப் பற்றிய இலவச சிறு புத்தகத்தை அனுப்பவும். K2

பெயர்: ______________________

முகவரி: ______________________

டச்வுட் இன் முகவரி: **ஏஷியன் பெயிண்ட்ஸ்**
டச்வுட் பிரிவு, த.பெ. எண். 11701, பம்பாய்-400 021.

